4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 19-4-72 புதன் மலர் 93

## எல். ஐ. சி. ஊழியர் போராட்டம்

பம்பாய், ஏப். 11—

ஆயுள்காப்பீட்டுக் கழக ஊழியர் சங்கம் ஏப்ரல் 17-ம் நாள் கோரிக்கை தினம் கொண்டாடுவதென்றும் எப்ரல் 25ம் நாள் போனஸ் முதலிய தமது கோரிக்கைகளை அடைய ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென்றும் முடிவு செய்துள்ளனர்.

## நமணசமுத்திரம் மில்லில் வேலை நிறுத்தம்

திருச்சி, ஏப். 18—

திருச்சி மாவட்டம் நமணசமுத்திரலுள்ள புதுக்கோட்டை டெக்ஸ்டைல்ஸ் மில் தொழிலாளர் மார்ச் 9ம் நாள் பஞ்சாலை ஒப்பந்தத்தை அமுல்நடத்தக்கோரி நேற்று முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இத்துடன் திருச்சி மாவட்டத்தில் 3 பஞ்சாலைகளில் வேலை நிறுத்தம் நடைபெற்று வருகிறது.

### வியட்நாம் மீது அமெரிக்க குண்டுவீச்சுக்கு

# இந்திய பார்லிமெண்டில் ஒருமித்த கண்டனம்

புதுடில்லி, ஏப். 18—

**வியட்நாம் மீது அமெரிக்கக் குண்டுவீச்சை நாடாளுமன்றத்தில் எல்லா கட்சிகளையும் சேர்ந்த உறுப்பினர்கள் நேற்று ஒருமுகமாகக் கண்டித்தனர். தென்வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை அங்கீகரிக்க வேண்டும் என்றும் அவர்கள் கோரினர்.**

வியட்நாம் மீது அமெரிக்கக்குண்டு வீச்சு பற்றி குறுகிய கால அவசரநோட்டீஸ் மீது சபையில் விவாதம் நடைபெற்றது.

ஹிரேன் முகர்ஜி (வலது கம்யூனிஸ்ட்) விவாதத்தைத் தொடங்கி வைத்தார்.

விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய தோழர் ஜோதிர் மாய்பாசு விதிமுறைகளையெல்லாம்ஒதுக்கி வைத்துவிட்டு குறுகியகால விவாதத்துச்குப்பதில் அமெரிக்க நடவடிக்கையைக்கண்டிக்கும் தீர்மானத்தை சபையில் நிறைவேற்றி யிருக்க வேண்டும் என்று கோரினர். இவ்வாறு ஒரு தீர்மானம் நிறைவேற்றுவதற்கு அரசாங்கத்துக்கு தயக்கம்இருப்பதாகப் படுகிறது என்றும் அவர் கூறினர்.

தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை அங்கீகரிப்பதற்கும், முழு அளவிலான ராஜீய உறவுகளை ஏற்படுத்திக்கொள்வதற்கும் இந்திய அரசு தாமதம் செய்வதேன் என்று தோழர் ஜோதிர் மாய்பாசு கேட்டார். தென் வியட்நாம் பொம்மைஅரசுடன் வர்த்தக உறவுகளை முறித்துக்கொள்ள வேண்டும என்றும் அந்தஅரசுடன் எந்தத் தொடர்பும் வைத்திருப்பது பெரும் குற்றம் என்றும் அவர் கூறினர்.

வியட்நாமிலிருந்து அமெரிக்கப்படைகள் வெளியேற வேண்டும் என்றும் அமெரிக்க நடவடிக்கையைக் கண்டிக்கும் குறிப்பை அமெரிக்க அரசாங்கத்துக்கு இந்திய அரசு அனுப்ப வேண்டும் என்றும் அவர் கோரினர்.

விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய முன்னாள் பாதுகாப்பு அமைச்சர் வி. கே. கிருஷ்ணமேனன் ஐ. நா. பாதுகாப்புச் சபையைக் கூட்டுவதால் பயனில்லை என்றும் நம்முடைய ராஜதந்திர நடவடிக்கை வலுவுடையதாக இருந்தால் அமெரிக்கக் குண்டுவீச்சுக்கு எதிராக மக்கள் அபிப்பிராயத்தைத் திரட்டுவதற்கு வேறு வழிகள் இருக்கின்றன என்றும் கூறினர்.

வியட்நாமில் யுத்தம் இறுதிக் கட்டத்தை அடைந்துள்ளது என்றும் சைகோன் வீழ்ச்சியைப் பொருத்து அனைத்தும் அமைந்துள்ளது என்றும் விடுதலைப் படைகளுக்கு எல்லா உதவிகளும் அளிக்க வேண்டும் என்றும் தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை அங்கீகரிப்பது முதல் அத்தியாவசிய நடவடிக்கை என்றும், அங்கீகாரத்துக்குத் தேவையான எல்லா நிபந்தனைகளையும் அது பூர்த்தி செய்துள்ளது என்றும் தாமதமின்றி இந்தியா அங்கீகரிக்க வேண்டும் மென்றும் கிருஷ்ணமேனன் கோரினர்.

அமெரிக்க நடவடிக்கை ஐ. நா. கோட்பாடுகளுக்கும் விரோதம் என்றும் வியட்நாமில் அமெரிக்கர்கள் இருப்பது சர்வதேச சட்டத்துக்கு எதிரானது என்றும் அவர் கூறினர்.

முன்னாள் வெளிவிவகார அமைச்சர் தினேஷ்சிங் பேசுகையில் புதிய ஆயுதங்களுக்கு சோதனைக்கூடமாக வியட்நாமை அமெரிக்கா பயன்படுத்துகிறது என்றும் ஆசிய மண்ணில் எலக்டிரானிக் யுத்தம் நடத்த முயலுவதை இந்தியா பார்த்துக் கொண்டிருக்க முடியாது என்றும் கூறினர்.

விவாதத்தை முடித்து வைத்த வெளிவிவகார அமைச்சர்சுவரண்சிங் தென் வியட்நாம் புரட்சி அரசை அங்கீகரிப்பது சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்ற முடிவை இந்திய அரசாங்கத்திடம் விட்டுவிட வேண்டும் என்று கூறினர். வடவியட்நாம்மீது அமெரிக்காகுண்டு வீச்சை நிறுத்தி பாரிசில் சமாதானபேச்சைத் தொடங்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டார்.

## ★ பத்திரிகை நிருபர்களை நான் சந்திக்கவில்லை ★ பேட்டி கொடுக்கவும் இல்லை

# பொய்ச்செய்திக்கு ரணதிவே மறுப்பு

புதுடெல்லி, ஏப். 19 -

**மேற்கு வங்க சட்டமன்றத் தேர்தலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தோல்வியடைந்ததற்கு, இந்திராவும் யாகியாகானும் ஒன்றே என்று, பிரச்சாரம் செய்ததுதான் காரணம் என்று பல பத்திரிகைச் செய்திகளில், படுகேவலமான, பச்சைப் பொய்கள் வெளியாகி இருந்தன.**

**இந்தப் பொய்யை ஓடி ஓடி பரப்புவதில் அக்கறையோடும் வெறித்தனமாகவும் ஈடுபடுவதில் வலது கம்யூனிஸ்டுகள்தான் தீவிரமாக இருக்கிறார்கள்.**

பி. டி. ரணதிவே

### பி. டி. ரணதிவே மறுப்பு

இந்தப் பொய்ச் செய்தியை மறுத்து, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் பி. டி. ரணதிவே பின் வரும் அறிக்கையை பத்திரிகைகளுக்கு வெளியிட்டிருக்கிறார்:-

''இந்திராவும்யாகியாகானும் ஒரே மாதிரியானவர்களே என்று மேற்கு வங்கத்தில் நாங்கள் சுலோகம் எழுப்பியதினால்தான் ஏராளமான வாக்காளர்கள் எங்களை விட்டு விலகிப்போய் விட்டார்கள்''—என்றுநான் பத்திரிகை நிருபரிடம் கூறியதாக - ஒரு செய்தியை யு. என். ஐ. (யுனைட்டெட் நியூஸ் ஆப் இந்தியா) என்ற செய்தி ஸ்தாபனம் வெளியிட்டுள்ளது.

அது மட்டுமல்ல. பாகிஸ்தானை உடைக்க இந்தியா முயற்சிப்பதாக முஸ்லீம் மக்கள் மத்தியில், எங்கள் கட்சி பிரச்சாரம் செய்ததினாலும்தான், தேர்தலில் எங்கள் கட்சி தோற்க நேரிட்டது என்றும் நான் கருத்துத் தெரிவித்ததாகவும் அந்தச் செய்தி ஸ்தாபனம் செய்தி வெளியிட்டிருக்கிறது.

### முழுப் பொய்

அந்தச் செய்தியும், அதில் கண்டுள்ள கருத்தும் அப்பட்டமான பச்சைப்பொய்யாகும். இப்படிப்பட்ட ஒரு பொய்யை ஒரு செய்தி ஸ்தாபனம் வெளியிட்டிருப்பது படுகேவலமான செயலாகும்.

நான் எந்தப் பத்திரிகை நிருபரையும் சந்திக்கவில்லை. நான் தெரிவித்ததாகக் கூறப்பட்டுள்ள கருத்தையும் நான் எவரிடமும் சொன்னதுமில்லை.

தேர்தல் சமயத்திலும் சரி, அதற்கு முன்பும்சரி, இந்திராவும் யாகியாகானும் ஒரேமாதிரியானவர்களே என்ற சுலோகத்தை எங்கள் கட்சி எழுப்பவே இல்லை.

முஸ்லீம்களுடைய வாக்குகளை வேண்டிப்பெற வேண்டுமென்பதற்காக, அவர்கள்மத்தியில் சென்று, ''பாகிஸ்தானை இந்தியா பிளக்கிறது'' என்று கூறி, ஒருபோதும் எங்கள் கட்சி பிரச்சாரம் செய்தது கிடையாது.

இந்தச் செய்தி முழுவதும் எங்கள் கட்சிக்குக் கெட்ட பெயர் உண்டாக்க வேண்டுமென்பதற்காகவும் மக்கள் மத்தியில் குழப்பத்தை ஏற்படுத்த வேண்டுமென்பதற்காகவுமே பரப்பப்பட்டிருக்கிறது.

## மோரிசியசுக்கு சீன கடன் உதவி

போட்லூயிஸ், (மோரிசியஸ்) ஏப் 16

மோரிசியஸ் தீவுக்கு சீனா ரூ26.13 கோடி கடன் கொடுத்திருக்கிறது. இதற்கு வட்டி கிடையாது இருநாடுகளுக்கும் இடையே தூதுவராலய தொடர்பும் ஏற்படும் என்று தெரிகிறது

### 500 தொழிலாளர்களை நிரந்தரமாக்க:

# சேலம்மாக்னசைட் தொழிலாளர் 3000 பேர் ஸ்டிரைக்

சேலம், ஏப். 17 -

**இங்குள்ள சேலம் மாக்னிசைட் பிரைவேட் லிமிடெட்டைச் சேர்ந்த தொழிலாளர்கள் 3000 பேரும் இன்று முதல் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.**

டெம்பரவரித் தொழிலாளர்கள் 500 பேரை நிரந்தரம் செய்யக் கோரியே இந்த வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

சி. ஐ. டி. யூ. துவங்கியுள்ள இந்த வேலை நிறுத்தத்துக்கு ஏ. ஐ. டி. யூ. சி. சங்கம ஆதரவு அளித்துள்ளது.

வேலை நிறுத்தம் நூற்றுக்கு நூறு வெற்றிகரமாக-முழுமையாக நடைபெற்று வருகிறது.

கோரிக்கை நிறைவேறும் வரை போராட தொழிலாளர்கள் உறுதி பூண்டுள்ளனர்.

(தொலைபேசிச் செய்தி)

# 116 எம். பி. க்கள் அறிக்கை

வியட்நாம் யுத்தத்தை தீவிரமாக்கியிருப்பதைக் கண்டித்தும் வியட்நாமிலிருந்து அமெரிக்கப்படைகள் வெளியேறவேண்டும் என்று கோரியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், காங்கிரஸ், வலது கம்யூனிஸ்கட்சி, தி. மு. க. சோஷலிட் கட்சி ஆகியவற்றைச் சேர்ந்த 116 நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூட்டறிக்கை விடுத்துள்ளனர்.

தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை இந்திய அரசு இப்போது அங்கீகரிக்கும் என்று நம்புவதாகவும் இதன்மூலம் ஆசியாவில் சமாதானத்துக்கும், சுதந்திரத்துக்கும் பொது எதிரியான அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கு எதிராகப் போராடும் வீரம் செறிந்த வியட்நாம் மக்களுக்கு இந்திய மக்களின் ஆதரவும் ஒருமைப்பாடும் வெளிப்படுத்தப்படும் என்று நம்புவதாகவும் அதில் கூறப்பட்டுள்ளது.

வடவியட்நாம் மீது மீண்டும் குண்டுவீச்சைத் தொடங்கி வியட்நாம் மக்களின் கூட்டுப் போராட்டத்தைநசுக்குவதற்கு அமெரிக்கப்படைகள் பகீரத முயற்சி செய்து பார்க்கின்றன என்றும் கூட்டறிக்கை கூறுகிறது.

## ''விவசாயி - தொழிலாளி''

(ஆங்கில மாத இதழ்)

### அகிலஇந்திய விவசாயசங்க வெளியீடு

எல்லா மாநில விவசாய சங்கங்களின் கிளைகளுக்கும்

**அன்பார்ந்த தோழர்களே!**

அகில இந்திய விவசாய சங்கத்தின் மத்திய கிசான் கவுன்சிலின் சென்ற கூட்டத்தில், மாதாந்திர விவசாய சங்க வெளியீடு ஒன்று கொண்டு வருவதென முடிவு செய்யப்பட்டது.

மத்திய கிசான்கவுன்சில் இதைப் பற்றி திட்டவட்டமாக பரிசீலனை செய்து அத்தகைய வெளியீடு ஒன்றை வெளியிடுவதென்று முடிவுசெய்துள்ளது.

அரசாங்கத்திடமிருந்து தேவையான பிரகடனமும் பெற்றாகிவிட்டது. அந்த வெளியீட்டின் பெயர் **''விவசாயி - தொழிலாளி''** என்றிருக்கும். இது '4, அசோகாரோடு, புதுடெல்லி' என்ற முகவரியிலிருந்து வெளிவரும்.

இந்த மாதாந்திர வெளியீடு. 20 பக்கங்கள் கொண்டதாக இருக்கும்; இதன் விலை அனேகமாக 30 பைசாவாக இருக்கும்.

இது 1972-ம் ஆண்டு மே முதல் தேதி வெளிவரும்.

நமது முயற்சி வெற்றியடைய வேண்டுமானல் எல்லா மாநில விவசாய சங்க கிளைகளும், மத்திய கிசான் கவுன்சில் உறுப்பினர்களும் தேவையான உடனடியான உதவியும் ஒத்துழைப்பும் நல்க வேண்டும்

(1) ஒவ்வொரு மாநில, மாவட்ட விவசாய சங்கக் கிளையும் தங்களுக்கு எத்தனை பிரதிகள் வேண்டும் என்று ஏப்ரல் 15-ம் தேதிக்குள் தெரிவிக்க வேண்டும்.

ஒவ்வொரு பிரதிக்கும் ரூ. 3 முன் பணம் கட்ட வேண்டும். ஏஜண்டுகளின் பெயர்களையும், முகவரியையும் உடனடியாக அனுப்பி வையுங்கள்.

(2) எல்லா விவசாய சங்கக் கிளைகளும் தங்கள் பகுதி விவசாய இயக்கங்களின் கிளர்ச்சிகளைப் பற்றியும் — பிரச்சனைகளைப் யற்றியும் தவருது அனுப்ப வேண்டும். அத்தகைய ரிப்போர்ட் நீங்கள் அனுப்பி வைக்கவில்லையென்ருல் டில்லியிலிருந்து வெளிவர இருக்கும் விவசாய சங்க வெளியீடு சுவையாக இருக்காது !

அவ்வாறு ரிப்போர்ட்டுகள் அனுப்புவதற்கு, தோழர்களே உடனடியாக ஏற்பாடு செய்யுங்கள்.

நீங்கள் அனுப்பும் ரிப்போர்ட்டுகள், தேவையான பிரதிகளுக்கான பணம் ஆகியவற்றை பின் வரும் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

**தோழர் ஏ. கே. கோபாலன்,**
தலைவர்
அகில இந்திய கிசான்சபா,
4, அசோகா ரோடு, புதுடெல்லி-1.

எல்லா கடிதங்களிலும் ''கிசான் சபா வெளியீட்டிற்காக'' என்று ஆங்கிலத்தில் குறிப்பிடவும்.

வாழ்த்துக்கள்.

தோழமையுள்ள,
**அரிகிருஷ்ண கோனர்,**
பொதுச்செயலாளர்,
அகில இந்திய கிசான் சபா,
கல்கத்தா - 17.

# சட்ட எரிப்புப் போராட்டம்

## ஆசிரியர்கள் ஆதரவு கடலெனப் பெருகுகிறது

மதுரை, ஏப். 19—

ஆசிரியர் கூட்டணி வரும் ஏப்ரல் 30-ம் தேதி நடத்த விருக்கும் கல்விச்சட்ட எரிப்புப் போராட்டத்துக்கு பொது உறுப்பினர்கள் பேராதரவு நல்கியுள்ளதாக ஆசிரியர் கூட்டணி மதுரை மாவட்ட செயலாளர் ஜே. எஸ். ராஜு அறிவிக்கிறார் மாவட்ட மாநிலப் பொதுக்குழுக்களின் முடிவுப்படி ஏப்ரல் 15, 16 தேதிகளில் பெரியகுளம், உசிலம்பட்டி பகுதிக்கு திரு. ஆ. முத்துச்சாமி (நெல்லை மாவட்ட ஆசிரியர் கூட்டணித் தலைவர்), மதுரை—நிலக்கோட்டை திருமங்கலம் பகுதிக்கு அருப்புக்கோட்டை நகரச் செயலர் திரு. குருசாமி திண்டுக்கல்—பழனி பகுதிக்கு மாநில பொதுக்குழு உறுப்பினர் திரு. மலைராசன் ஆகியோர் தலைமையில் அப்பகுதி நடவடிக்கைக் குழு கன்வீனர்கள் மற்றும் பொதுப்பாளர்கள் அடங்கிய குழுவினர் சென்றனர். அறிவிப்புப்படி குறிப்பிட்ட இடங்களில் ஆசிரியர்கள் திரளாக வந்திருந்து போராட்ட நடவடிக்கைகள் பற்றிய தங்களின் கருத்துக்களை அளித்தனர் என்றும் ஜே,எஸ். ராஜு அறிக்கையில் கூறுகிறார், அந்த அறிக்கையில் மேலும் கூறப்பட்டுள்ளதாவது.

ஆசிரியப் பெருமக்களிடம் மாநில செயற்குழு முடிவெடுத்து அறிவித்துள்ள போராட்ட நடவடிக்கைகள், மாவட்ட செயற்குழு, பொதுக்குழு தீர்மானங்கள் போராட்டத்தில் ஈடுபட்டால் எடுக்கப்படவிருக்கும் நடவடிக்கைகள் பற்றிய கல்வித்துறை அறிவிப்புகள் மற்றும் சட்டவிதிகள் ஆகியவை விளக்கப்பட்டு பரிசீலனை செய்யப்பட்டன.

### மாவட்டத் தலைநகரில் சட்டத்தை எரிக்க ஆதரவு

ஆசிரியர்களின் கருத்துக்கள் வினு வடிவில் ஆசிரியர்களிடம் கேட்டறிப்பட்டது. அதில் கல்விச் சட்டங்களை திட்டமிட்டபடி எரிக்க வேண்டும். ஊராட்சி ஒன்றிய ஆசிரியர் மாறுதல் குழுவின் நடவடிக்கையை எதிர்த்து ஆர்ப்பாட்டம் மறியல், முற்றுகைப் போராட்டம் நடத்தவேண்டும். ஜுன் 1-ம் தேதி ஊதியம் வாங்க மறுத்தல், 1972 — 1973 பள்ளி ஆண்டில் ஜுன் முதல் மதிய உணவு பொறுப்பினை ஆசிரியர்கள் மறுப்பது ஆசிரியர்கள் பிற பணிகளில் ஈடுபடுத்தப்பட்டால் அதனை எதிர்ப்பது என்பதற்கு மிகப் பெரும் பான்மையான ஆதரவு தெரிவிக்கப் பட்டது. சட்டத்தை எரிக்கும் போராட்டத்தில் ஈடுபட விருப்பம் தெரிவித்து மாவட்டம் முழுதும் 1,500 ஆசிரியர்களுக்கு மேல் பெணகளும் எழுத்து பூர்வமான ஒப்புதல் தெரிவித்துள்ளனர் சட்ட எரிப்பை மாவட்டத் தலைநகரில் நடத்துவது என்பதற்கு பெரும்பான்மை ஆதரவு தெரிவிக்கப்பட்டது. மறியல் போராட்டத்தினை வட்ட அளவில் உள்ள கிளைகளில் ஆசியர்கள் ஒன்று சேர்ந்து நடத்துவது என்பதற்கு ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

ஏப்ரல் 20—க்குள் அரசு கோரிக்கைகளை முழு அளவில் ஏற்றுக் கொண்டால் எழுத்துப் பூர்வமான—காலம் நிர்ணயம் செய்து எழுத்துப் பூர்வமான ஒப்பந்தத்தின் பேரிலேயே போராட்டங்களை நிறுத்தி வைக்க பொதுக்குழு முடிவெடுக்கவும் கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன.

வரும் ஏப்ரல், 22, 23 தேதிகளில் பழனியில் நடைபெறும் பொதுக்குழுவினையொட்டி ஊர்வலம்—பொதுக்கூட்டம் பழனியில் நடத்துவது என்றும் கருத்துக்கள் அளிக்கப்பட்டன.

## காலியிடத்துக்கு விலை ரூ 4 கோடி

பம்பாய், ஏப். 17—

பம்பாய் பேக்பே பகுதியில் ஒரு சதுர மீட்டர் நிலம்விலை 12 ஆயிரத்து 800ரூபாய்க்கு ஏலம் கேட்கப்பட்டுள்ளது.

அந்த இடத்தில் ஒரு சினிமா தியேட்டர் கட்டுவதற்காக ஏல நோட்டீஸ் விடப்பட்டது. மொத்த இடம் 3300 சதுர மீட்டர் கொண்டது.

எனவே இந்த வெற்று காலி இடம் மட்டும் 4 கோடியே 22 லட்சத்து 40 ஆயிரம் ரூபாய்க்கு ஏலம் கேட்கப்பட்டது. அடுத்த ஏலங்கள் 4 கோடி 21 லட்சத்து 41 ஆயிரம் ரூபாய்க்கும், 3 கோடியே 96 லட்சம் ரூபாய்க்கும் கேட்கப்பட்டுள்ளது.

இந்தப் பகுதியில் 1969ம் ஆண்டில் ச. மீ. ரூ. 3671 தான் ஏலம் கேட்கப்பட்டது.

நம்மிடம் பணம் ஏன் இல்லையென்பதும், பணம் எங்கே குவிந்திருக்கிறதென்றும் தெரிகிறதா?

# தீக்கதிர்

## நிக்சனின் வெறியாட்டமும் சோஷலிஸ்ட் முகாமின் கடமையும்

தென் வியட்நாமின் பின்லாங் மாநிலத்தை விடுதலைப் படைகள் விடுவித்துள்ளன. சைகோன், டானங் நகரங்களையும் விடுதலைப் படைகள் தாக்கிவருகின்றன. யுத்தத்தை வியட்நாமிய மயமாக்கும் நிக்சனின் திட்டத்தை இந்த வெற்றி குழிதோண்டிப் புதைத்துவிட்டது.

நவம்பர் மாதத் தேர்தலில் ஓட்டு வாங்குவதற்காக வியட்நாமிலிருந்து அமெரிக்கப் படைகளைத் திரும்பப் பெறுவதாக போலி நாடகமாடிய நிக்சன் இப்போது யுத்தத்தைத் தீவிரமாக்கும் நடவடிக்கையை எடுத்துள்ளார்.

ஹனோய் மீதும் ஹைபாங் மீதும் வெறித்தனமான விமானத் தாக்குதலைத் தொடுக்குமாறு நிக்சன் உத்திரவிட்டுள்ளார்.

அடுத்த மாதம் நிக்சன் மாஸ்கோவுக்குச் செல்லவிருக்கும் சமயத்தில் 4-ஆண்டுகளுக்குப்பின் ஹைபாங் துறைமுகத்தில் மீண்டும் குண்டுவீச உத்திரவிட்டிருப்பதும் அங்கு சோவியத் கப்பல் தாக்கப்பட்டிருப்பதும் அத்துமீறிய நடவடிக்கையாகும். வியட்நாம் பிரச்னைக்கு அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் பேச்சுவார்த்தை மூலம் தீர்வுகாணத் தயாராக இல்லை என்பதை இது அம்பலப்படுத்துகிறது.

பாரிசில் சமாதானப் பேச்சுவார்த்தை நடக்கும்போதே அமெரிக்க அரசு முட்டுக்கட்டை போட்டு வட வியட்நாம்மீது குண்டுவீசத் தொடங்கியது.

இந்நிலையில் தென் வியட்நாம் விடுதலைப் படைகள் பதிலடி கொடுத்து அமெரிக்கப் படைகளை நிலைகுலைய வைத்துள்ளன. ஹியூ அருகே 196-வது அமெரிக்கப் படையில் கலகமே தோன்றியுள்ளது. அமெரிக்கச் சிப்பாய்கள் போர் செய்ய மறுக்கும் நிலைமை அங்கு உருவாகியது.

இந்நிலையில் கிட்டத்தட்ட அணு குண்டுக்கு நிகரான குண்டுகளை மக்கள்வாழும் பகுதிகளில் எல்லாம் வீசும் காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கையை நிக்சன் எடுத்துள்ளார்.

இரண்டாவது உலக யுத்தத்தில் நாஜிகளின் குண்டுவீச்சு அளவையும் மிஞ்சிய பின்னும் வியட்நாம் மீது இப்போது குண்டுவீச்சு மேலும் தீவிரப்படுத்தப்பட்டுள்ளது.

இந்தக் குண்டுவீச்சால் வியட்நாம் மக்களை பணிய வைக்கமுடியாது என்று கண்டபின்னும் தென் வியட்நாம் பொம்மை அரசை பதவியில்வைத்திருப்பதற்காக யுத்தத்தைத் தீவிரப்படுத்தும் நடவடிக்கையை நிக்சன் எடுத்துள்ளார்.

நிக்சனின் நடவடிக்கைக்கு அமெரிக்க நாட்டிலேயே பலத்த எதிர்ப்பு ஏற்பட்டுள்ளது.

நிக்சனின் இந்த யுத்த வெறி சோஷலிஸ்ட் முகாம் ஒன்றுபட்ட நடவடிக்கை எடுக்க வேண்டியதை அவசர அவசியக் கடமையாக்கியுள்ளது.

சோஷலிஸ்ட் முகாமின் பிளவினால் நிக்சன் தைரியமடைந்து வியட்நாமில் இப்போது யுத்தத்தைத் தீவிரப்படுத்தும் நிலைமை உருவாகியுள்ளது. இந்த நிகழ்ச்சிக்குப் பின்னும் சோஷலிஸ்ட் முகாமின் வேற்றுமைகள் ஒன்றுபட்ட நடவடிக்கைக்குக் குறுக்கே நிற்க முடியாது.

பங்களாதேசப் போராட்டத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் துரோகத்துக்குப்பின்னும் இந்திய அரசு உறுதியான நிலை எடுக்கவில்லை என்பதை தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தை இன்னும் அது அங்கீகரிக்காதிருப்பது வெளிப்படுத்துகிறது.

போராடும் வியட்நாம் மக்களுக்கு ஆதரவாக சகல மக்களும் திரண்டெழுந்து சகோதர ஆதரவினை நல்கவேண்டும் என்று அறைகூவி அழைக்கிறோம்.

---

## திருவெற்றியூரில் மார்க்சிஸ்ட் பொதுக்கூட்டம்

திருவொற்றியூர், ஏப்.17—திருவெற்றியூர், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நகரக் கமிட்டி சார்பாக அசோக் லேலாண்ட் தொழிலாளர்கள் போராட்டத்தை ஆதரித்து ஏப்ரல் 12ந் தேதி சன்னதி தெருவில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்திற்கு நேஷனல் கார்பன் கம்பெனி தொழிற்சங்கப் பொதுச் செயலாளரும் கட்சியின் நகரக்கமிட்டி உறுப்பினருமான தோழர் ஆர். ரங்கநாதன் தலைமை வகித்தார். தோழர்கள் திருநாவுக்கரசு, பத்மநாபன், கண்ணப்பன் ஆகியோர் பேசிய பிறகு சி. ஐ. டி. யூ. உதவி செயலாளரும் மாநில கமிட்டி உறுப்பினருமான தோழர் வி. பி. சித்தன் பேசினார்.

சித்தன் பேசும்போது ஒரு தொழிற்சங்கம் அதில் உள்ள தொழிலாளிகள் போராட்டம் நடத்தி வெற்றி பெறுவது சிரமம் என்றபடிப்பினையை சிம்சன் தொழிலாளர்போராட்டம் மூலமும் எம். ஆர். இ. தொழிலாளர்போராட்டம் மூலமும், பஞ்சாலைத்தொழிலாளர் போராட்ட மூலமும் தமிழக தொழிலாளி வர்க்கம் புரிந்து கொண்டது.

அனைத்து தொழிலாளர்களையும் ஒன்று திரட்டி போராடுவதின் மூலமே உழைக்கும் வர்க்கம் தனது உரிமைகளை பெற முடியும். அதற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சி.ஐ.டி.யூ. வும் உறுதுணையாகி நிற்கும் என்று குறிப்பிட்டார்.

---

# மேலிருந்து உத்தரவிட்டது போல் நடந்த தேர்தல்

## மேற்கு வங்கத் தேர்தல் பற்றி பம்பாய் ஆங்கில வார ஏட்டின் தலையங்கம்

**பம்பாயிலிருந்து வெளியாகும் 'எக்கனமிக் அண்ட் பொலிடிக்கல் வீக்லி' என்ற பத்திரிகையின் மார்ச் 25-ம் தேதி இதழில் மேற்கு வங்கத் தேர்தலைப் பற்றி வெளியான தலையங்கத்தின் ஒரு பகுதியைக் கீழே தருகிறோம்.**

தேர்தல் முடிவுகளைப் பற்றிய வழக்கமான விமர்சனங்களும் புள்ளி விவரங்களும் மேற்கு வங்க சட்டமன்ற தேர்தல்களில் வாக்காளர்கள் அரசியல் ரீதியாக எவ்விதம் பிரிந்தனர் என்பதை தெரிந்து கொள்ள ஓரளவே உதவியுள்ளன.

இடதுசாரி முன்னணித் தலைவர்களும், கல்கத்தாவிலுள்ள இடதுசாரி பத்திரிகைகளும் தேர்தல் மோசடி பற்றி கூறும் குற்றசாட்டுகளை ஒதுக்கித் தள்ளிவிட்டால் கூட நேரடிச் சாட்சியத்திலிருந்தும், பத்திரிகைகளில் வெளியாகியுள்ள விவரங்களைக் கவனமாக கணிப்பதிலிருந்தும் ஆளும் கட்சி விரித்த அடிப்படையில் பயங்கர அடக்குமுறையிலும், தில்லுமுல்லுகளிலும் இறங்கியுள்ளது என்ற முடிவுக்குத்தான்—ஆளும் காங்கிரஸ் 'வெற்றி'யை உறுதிப் படுத்துவதற்கு நிர்வாகம்உடைந்தையாக இருந்துள்ளது-என்ற முடிவுக்குத்தான் ஒருவர் வர முடியும்.

கடைசி நேரத்தில் கிடைத்த உளவு இலாகா தகவல்களிலிருந்தும், பிரதம மந்திரியின் இடைவிடாத தேர்தல் சுற்றுப்பிரயாணத்தின்போது அவருடைய கணிப்பிலிருந்தும், காங்கிரஸ் வெற்றிபற்றி சந்தேகம் வந்தது என்றும், இந்நிலையில் நன்கு திட்டமிடப்பட்ட வெளிப்படையான தைரியமான மோசடி செய்யும் திட்டம் திறமையாக அமுல் நடத்தப்பட்டது என்றும், இடதுசாரி பத்திரிகைகளும், இடதுசாரி கட்சியினரும் குற்றம் சாட்டியுள்ளனர்.

எப்படியாயினும் பல முக்கியமான தொகுதிகளில் உண்மையில் நடந்திருப்பதைப் பார்த்தால் யதார்த்தப் போக்கிற்கு பெரிதும்மாறுபட்டிருப்பது தெரிகிறது. சில முக்கியமான கேள்விகளை எழுப்புகிறது. தேர்தலுக்கு முன்பாக பத்திரிகைகளில் பத்தி பத்தியாக எழுதிய நிருபர்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை விட ஆளும் காங்கிரஸ் கட்சி சற்றுதான் முன்னிற்கும் என்பதற்குமேல் ஒப்புக் கொள்ளாதிருந்திருக்கும் நிலையில் சில கேள்விகள் எழுகின்றன.

ஜோதிபாசு, தருண் சென் குப்தா, பினய் கோனர் போன்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பெருந் தலைவர்களுக்கு எதிரான சில முக்கியமான போட்டிகளில் காங்கிரஸ்—வலது கம்யூனிஸ்ட் கூட்டணி 100லிருந்து 300 சத விகிதம்வரை வாக்குகளை அதிகரித்துள்ளது. இது இந்திரா ஜாலத்தின் விளைவு என்பதை விட இந்திராவின் ஜாலமாகவே படுகிறது.

ஓட்டர்கள் நிலையில் உண்மையான மாறுதல் ஏற்பட்டிருக்கும் சாத்தியப்பாட்டை நிராகரிப்பதற்காக இவ்விதம் கூறவில்லை. மக்களிடம் நேரிடையாக அனுபவத்தில் மக்கள் நிலையில் மாற்றம் ஏற்பட்டிருப்பதாக அபிப்பிராயம் ஏற்பட்டுள்ளது. சில பிரிவுகள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்தும், மற்ற இடதுசாரி கட்சிகளிலிருந்தும் காங்கிரசுக்குப் போயுள்ளனர் என்றும் இன்னும்சிலபகுதிகள் இதற்கு நேர் எதிராகப் போயுள்ளனர் என்றும் அபிப்பிராயம் ஏற்பட்டுள்ளது. சில பகுதியினர் அலட்சியம் எடுத்து இந்த இருசக்திகளுக்கும் மையமாக நிற்கும் நிலை எடுத்திருக்கும் அறிகுறிகளும் தென்பட்டன. ஆனால் ஓட்டு எண்ணிக்கை மிகவும் சந்தேகம் அளிக்கக்கூடியதாக இருக்கும் நிலையில் எந்தத் திசையில் அதிக மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்றோ, அதன் அளவு எவ்வளவு என்றோ தீர்மானிக்க முடியாது.

### வாய்ப்பறையில் உண்மையில்லை

என்றாலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அடியோடு முறியடிக்கப்பட்டது என்றும், சிறிதுகாலத்துக்கு முன் மனதில் வைத்துப் போற்றிய கட்சியை மக்கள் நிராகரித்து விட்டார்கள் என்றும் ஒரு முக்கியமான படித்த வலது கம்யூனிஸ்ட் எம். பி. நாடாளுமன்றத்தில் வாய்ப்பறை அடித்திருப்பதில் சாரமில்லை என்பதை வாக்குகள் பற்றிய புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. ஏனெனில் கேள்விக்கிடமான புள்ளி விவரங்களே மொத்தம் செல்லுபடியான வாக்குகளில் 27 சதவிகித வாக்குகளை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெற்றிருப்பதைக் காட்டுகின்றன. ஒரு வருட காலம் சட்ட முறையிலும், சட்டத்துக்கு மாறானமுறையிலும் மார்க்சிஸ்ட் கட்சி தளங்களை ஆளும் கட்சியும் நிர்வாக யந்திரமும் தாக்கிச் சரிபடுத்திய பின்னும் மொத்தம் பதிவான வாக்குகளில் நாலில் ஒரு பங்கு ஓட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெறமுடிந்திருக்கிறது. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் மொத்த இடங்களில் அது கால்வாசி இடங்களைப் பெற்றிருக்க முடியும்.

### மார்க்சிஸ்டுக்கு கிடைத்த வாக்குகள்

பூர்வாங்க கணக்கீட்டின்படி மொத்தம் செல்லுபடியான 1கோடியே 33 லட்சத்து 50ஆயிரம் வாக்குகளில (59·84 சதவிகித) மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி 35லட்சத்து 20ஆயிரம் வாக்குகளை அல்லது 27 12 சதவிகித வாக்குகளைப் பெற்றிருக்கிறது. ஆளும் காங்கிரஸ் கட்சி 63 லட்சத்து 40 ஆயிரம் வாக்குகளை அல்லது 47,52 சதவிகித வாக்குகளை பெற்றிருக்கிறது. மொத்தத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு 1971-ம் ஆண்டின் உச்சநிலையிலிருந்து 5 சதவிகிதம் குறைந்திருப்பது உண்மையே. ஆனால் சென்றவருடம் அக்கட்சி அநேகமாக முற்றும் தனிமைப்பட்டிருந்தது இத்தடவை அக்கட்சி மாநிலத்தின் எல்லா இடதுசாரி சக்திகளுடனும் நெருக்கமாக இணைந்திருந்தது எவ்வளவோ நடந்திருந்தபோதிலும் இடதுசாரி கூட்டணி வேட்பாளர்கள் மொத்தம் செல்லுபடியான வாக்குகளில் மூன்றிலொரு பங்கு வாக்குகளைப் பெற்றிருந்தனர். ஆகவே மேற்கு வங்கத்தில் இடதுசாரி சக்திகளுக்கு இரங்கற்பாட்டு பாடவேண்டிய நேரம் இதுவல்ல.

இதனால் இடதுசாரி கட்சிகளும், குறிப்பாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் மிகவும் நெருக்கடியான நிலையை எதிர்நோக்கவில்லை என்று அர்த்தமில்லை. இந்தச் சம்பவங்களை முற்றும் எதிர்பார்த்திராத நிலையில் இக்கட்சிகள் தற்போது நிலைகுலைந்துள்ளன. முதலாளித்துவ ஜனநாயக வழி முறைகளில் முற்றும் நம்பிக்கை வைத்து, தேர்தல் முடிந்த மறுநாளே கல்கத்தா வீழும் அதைச் சுற்றியும் நடந்ததைப் பார்த்து இக்கட்சிகளின் தலைமை சட்டமன்றத்தில் மெஜாரிட்டி கிடைக்காவிட்டாலும் நல்ல வெற்றி கிட்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

அதற்குப்பின் அடக்குமுறை வெறியாட்டத்திலிருந்து அகதிகள் வெள்ளம்போல் வந்தனர். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநில தலைமை நிலையமே அகதிகள் முகாமாக மாறியது. அதன் முன்னுள்ள சந்தில் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் ததும்பினர்.

நெருக்கடி நிறைந்த மாநில மான மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மிகுந்த நெருக்கடிக்குள்ளாகியுள்ளது.

---

## ஆசிரியருக்கு...

### விவசாயிகளின் வேதனை!

ஐயா,

1970-71 ஆண்டுகளில் திருப்பரங்குன்றம்- பசுமலை தென்கரைகண்மாயின் மராமத்து பணி நடைபெற்றது. அப்பணியை பொதுப் பணித்துறை பொறியாளர்கள் மேற்கொண்டார்கள். அதுபோது கண்மாயின் மடை சீரமைக்கப்பட்டது. அப்படி சீரமைப்பு செய்தபோது மடையின் கண்கள் பாரபட்சத்துடனும் உள் எண்ணத்துடனும் அமைக்கப்பட்டிருக்கிறது என விவசாயிகள் அனைவராலும் பேசப்பட்டும், விம்மலாகவும், வேதனையாகவும், விவசாயிகளுக்குப் பிரச்சினையாகவும் இருந்து வருகிறது. குறிப்பிட்ட ஒரு கண்ணின் வழியாக சிறிதளவு தண்ணீரே வருகிறது. மராமத்து நடைபெறுவதற்கு முன்னர் வந்துகொண்டிருந்த நீரின் அளவில் நாலில் ஒருபங்கே தற்போது வந்து கொண்டிருக்கிறது. இதன் விளைவாக விவசாயிகள் தங்களது நிலங்களுக்கு நீண்டநாட்களுக்கு ஒருமுறையே நீர் பாய்ச்சும்நிலையும் பயிர்கள் வாடியும், நிலங்கள் வெடித்தும்கிடக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. பத்துப்பதினைந்து ஏக்கர் நிலமுள்ளவர்கள் மோட்டார்களுடன் வந்து "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்ற மொழிக்கேற்ப தங்களது நிலங்களுக்கு நீர் பாய்ச்சி விடுகின்றனர். ஆனால் காணி நிலமுள்ள விவசாயி வீணே அலைந்து திரும்புகிறான், கண்மாயில் அதிக அளவு நீர் இருந்தும், பயிர் வாட பார்த்து நிற்கும் பரிதாப நிலை, வல்லான் பாய்ச்சிய பின்பு மீந்த நீருக்கு தானம் பார்த்து நிற்க வேண்டியது ஏழை விவசாயிகளின் நிலை.

எனவே இது சம்பந்தப்பட்ட, கிராம அதிகாரிகளும், பொதுப்பணித்துறை பொறியாளர்களும் மடையின் கட்டிட அமைப்பை மீண்டும் ஆய்ந்தும், விவசாயிகளின் நெருக்கடி நிலையை உணர்ந்தும், பாரபட்சமின்றி, நிலப் பகுதிகளின் விகிதாச்சாரப்படியும், நிலங்களின் அமைப்பிற்கேற்றபடியும் மடையின் வடக்கு 'கண்'ணினை விரிவு படுத்த ஆவன செய்ய வேண்டும். இல்லையெனில் பயிர்கள் செத்துவிடும் என்பதை நினைவில் கொண்டு பணியை மேற்கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு,
வே. இராசாராம்பாண்டியன்
பசுமலை.

---

### திருப்பத்தூர் சம்பவத்தை எதிர்த்து

## சர்வகட்சி கண்டன பொதுக்கூட்டம்

சாத்தூர், ஏப், 17—சாத்தூர் வடக்குரத வீதியில் ஏப. 14-ந்தேதி திரு. பி ஆர்.மகாலிங்கம் ஆசாரி (ஆளும் காங்கிரஸ்)தலைமையில சர்வகட்சி பொதுக் கூட்டம் நடைபெற்றது

அக்கூட்டத்தில் சாத்தூர் தாலுகா மார்க்சிஸ்ட் செயலாளர் மற்றும் அபூபக்கர் (ஆளும் காங்கிரஸ்)ஜி செல்லப்பா(இந்தியகம்யூனிஸ்ட்) பி. கே. வேலன் (ஸ்தாபன காங்கிரஸ்),ஆறுமுக ஆசாரி (சுதந்திரா கட்சி), ஆளும் காங்கிரசைசேர்ந்த அண்ணாமலை, அப்பணசாமி ஆகியோர் பேசினர்,

திரு. என். எஸ். கந்தசாமிஆசாரி நன்றிகூற கூட்டம் முடிந்தது.

### தேவகோட்டையில்

தேவகோட்டை, ஏப்.17-தேவகோட்டை வள்ளுவர் திடலில் ஏப். 14-ல் சர்வகட்சி பொதுக்கூட்டம் நடைபெற்றது, ஸ்தாபன காங்கிரசைச் சேர்ந்த இராமகிருஷ்ணத் தேவர் தலைமை வகித்தார்.

திருப்பத்தூர் கல்லூரி மாணவர்களை, கல்லூரி நிர்வாகமே குண்டர்களை வைத்து தாக்கியது குறித்தும், முகவை மாவட்ட ஸ்தாபன காங்கிரஸ் செயலாளர் தங்கவேலன் தாக்கப்பட்டதை எதிர்த்தும், சர்வகட்சி தொண்டர்கள் நடத்திய சர்வகட்சி ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்களை கைது செய்து ஜெயிலில் அடைத்ததற்கும் கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

இந்தக் கூட்டத்தில் பக்தவத்சலம் (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி), திருமதி சக்தி கோதண்டம் (வலது கம்யூனிஸ்ட்), அரியமாணிக்கம் அம்பலம் (சுதந்திரா), இராமலிங்கம் (ஆளும்காங்கிரஸ்). நெற்குப்பை லெட்சுமணன், கண்ணப்பா, வள்ளியப்பா,நரசிம்மஐயர். சந்திரன். சீனிவாசன், பழனிச்சாமி, முத்துவயிறு, துரைகதிர் வேலன், முத்தண்ணபிள்ளை,ஆண்ணாமலை பாலசுப்பிரமணியன், அப்துல் சித்திக், எஸ். சிதம்பரம் ஆகியோர் கண்டித்துப் பேசினர்.

---

# எதிரொலி

இந்திரா காங்கிரஸின் மேற்குவங்க மந்திரிசபையிலுள்ள மூன்று மந்திரிகளுக்கு பெரும் அதிருப்தி ஏற்பட்டுவிட்டது. தங்களுக்குக் கொடுக்கப்பட்ட இலாக்காக்கள் திருப்திகரமாக இல்லை. அந்த இலாக்காக்களில் திட்டவட்டமாக தங்களுடைய வேலைகள் இவைதான் என்ற வரையறுப்புகள் இல்லை. ஏனைய மந்திரிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள இலாக்காக்களின் எல்லைகள் தங்களுடைய இலாக்காக்களில் குறுக்கிடுகின்றன. இந்த நிலைமையில் தாங்கள் மந்திரிகளாக இருப்பதில் பயனில்லை என்று மூன்று மந்திரிகள் ராஜினாமாச்செய்யப் போவதாகத் தெரிகிறது. இது பற்றி எல்லாம் இந்திரா காந்தியுடன் பேசித்தீர்க்க சங்கர்ரே டெல்லி சென்றுள்ளார்.

—டைம்ஸ் ஆப் இந்தியா செய்தி ஏப். 15

கொள்ளையடித்த திருட்டை பங்கிடுவதில் திருடர்களிடையே சண்டை! முதல் காட்சி ஆரம்பம்!

ஃ ஃ ஃ ஃ

கோயில் நிலங்களுக்கு நில உச்சவரம்புச் சட்டத்தில் விதிவிலக்குக் கொடுக்கப் பட்டிருப்பதை ரத்து செய்யக்கூடாது. ரத்துசெய்தால், ரூ 4 கோடி நஷ்ட ஈடு கொடுக்கவேண்டி வரும் என்று மந்திரி ப. உ. சண்முகம் டெல்லிக் கூட்டத்தில் கூறினார்.

—டெல்லிச் செய்தி.

உண்மையான காரணம் வேறு. இன்று கோயில் நிலத்தை வைத்து சம்பாதித்து வருவோருக்கு ஆபத்து வரும் என்பதையே மந்திரி வெளியில்சொல்ல வெட்கப்படுகிறார். காரணம் தமிழ் நாட்டுக்கோயில்களின் சொத்துக்களை நிர்வாகிக்கும் டிராஸ்டிகள் பெரும்பாலானவர்கள் இன்று தி. மு. க. வினராக இருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ ஃ

ராஜராஜ சோழனுக்கு தஞ்சைக் கோயிலில் சிலை வைக்கும் இந்தச் சாதாரண பிரச்சினையில்கூட மத்திய காங்கிரஸ் அரசு தலையிட்டுள்ளது.

தஞ்சையில் மாநில அமைச்சர்கள் ஆவேசம்.

—தஞ்சைச் செய்தி

இந்த மத்திய காங்கிரஸ் 'உறவுக்குக் கைகொடுப்போம் என்று பலப்படுத்தினீர்களே தேர்தலில் மறந்து விட்டீர்களா?

இன்றைக்குங்கூட "ஜனநாயகத் தொட்டிலில் வளர்ந்த இந்திரா காந்தியைக் கொண்டு பிரஹதீஸ்வரர் ஆலயத்திற்குள் ஒருநாள் ராஜராஜ சோழனின் சிலையை திறந்திடுவோம்" என்று பேசி இந்திரா பிரார்த்தனைகள் நடைபெறுகின்றனவே! இதுதான் மாநில சுயஆட்சிக்காக நடத்தும் போராட்டமா?

ஃ ஃ ஃ ஃ

ரிசர்வ் பாங்கியில் மாநிலங்கள் இதுவரை வாங்கியுள்ள ஓவர் டிராப்ட் கடன் ரூ 470 கோடியே 79 லட்சம் என்றும் மேலும் தொடர்ந்துவரப்புக்குமீறி ஏப் 1-ந்தேதியிலிருந்துவாங்கக் கூடாதென்று மத்திய அரசு தாக்கீது விட்டுள்ளது.

— டெல்லி செய்தி

கடன் வாங்குதல்—திருப்பிக் கொடுத்தல் எனும் இதுவரை இருந்து வந்த சாதாரண நிதி வசதி கூட தடுக்கப்படுகிறது. பெட்டிச்சாவி மட்டுமல்ல; சமையலறைச் சாவியுங்கூட இனிமேல் மாமியார் கையில். இதுவே இந்திய மாநிலங்களின் இன்றைய நிலைமை.

ஃ ஃ ஃ ஃ

ஆன்மீகத் துறையில் மிகச் சிறந்த நாடு இந்தியா என்று இந்தியா வந்துள்ள போப்பாண்டவரின் பிரதிநிதி பாராட்டினார்.

— சென்னைச் செய்தி

அதனால் தான் நாளுக்கு நாள் அதிகமான சாமி சிலைகள் திருடப்பட்டு வெளிநாடுகளில் விற்கப்படுகின்றனவோ?

அதனால்தான்கத்தோலிக்க பாதிரிமார்கள்கேரளத்து கன்னிகா மடத்துப் பெண்களை அதிகமாக ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்து விற்பனை செய்ய அனுமதிக்கப்படுகிறார்களோ?

[illegible]...

ஃ ஃ ஃ ஃ

இலங்கைக் கம்யூனிஸ்ட்கட்சியின் உறுப்பினரும் உதவி கல்வி மந்திரியுமான பி. ஒய், துடவே என்பவர் ஸ்ரீமாவேபண்டாரநாயக்கின் அடக்குமுறைச் சட்டத்தை எதிர்த்து சட்டசபையில் வாக்களிக்காமலிருந்ததற்காக இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து தற்காலிகமாக நீக்கப்பட்டுள்ளார்.

—இலங்கைச் செய்தி

எய்தவனிருக்க அம்பை நொந்துகொள்வது ஏன்? திருமதி பண்டாரநாயக்கின் அடக்குமுறை ஆட்சியின் ஒரு அங்கமாக இருந்துகொண்டே இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சி இந்தநடவடிக்கைஎடுப்பது விசித்திரமாகஇல்லையா? அந்த அடக்குமுறை ஆட்சியை எதிர்ப்பது உண்மையானால், மந்திரிசபையிலிருந்து ராஜினாமாச் செய்துவிட்டு வெளியேற வேண்டாமா? மீசைக்கும் ஆசை! கூழுக்கும் ஆசை!

ஃ ஃ ஃ ஃ

சென்ற மூன்றாண்டுகளில் பம்பாய் நகரத்தில் நிலத்தின் விலை 300 சதவிகிதம் உயர்ந்துள்ளது. தெற்கு பம்பாயில் ஒரு சதுரமீட்டர் ரூ. 12 ஆயிரம். வீடுகட்ட ஒரு துண்டு நிலம் வாங்க ரூ. 4 கோடி ஆகும்.

—எகனமிக் டைம்ஸ் பம்பாய், ஏப். 15

பங்கு மார்க்கெட் சூதாட்டக்காரர்கள், கள்ளப்பண சாம்ராஜ்ய மன்னர்களின் உறைவிடம் எது என்பது புரிந்ததா?

ஃ ஃ ஃ ஃ

ராஜ்ய சபாவில் சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினராக இருந்த முரஹரி என்பவர் ராஜ்யசபாவின் உதவித்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன்பு காங்கிரஸ் தலைவர்கள் அவரைத் தன் கட்சியிலிருந்து ராஜினாமாச் செய்யும்படி வற்புறுத்தி எழுதி வாங்கி விட்டதாக சோஷலிஸ்ட் தலைவர்கள் குற்றம் சாட்டினர்.

—டெல்லி செய்தி

மேற்கு வங்கத்தில் அடித்த "இந்திரா அலை" இரவோடு இரவாக டெல்லியிலும் அடித்திருக்கிறது.

— கே. எம்.

## ஆத்தூர் வட்டத்தில்

# 65 ஊர்களில் பிரச்சாரம்

### சைக்கிளில் 3 குழுக்களாகச் சென்று விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கினர்

ஆத்தூர், ஏப். 16 —

சேலம்மாவட்டம்ஆத்தூர் தாலுகாவில் ஏப். 3 முதல் 8 வரை விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கிப் பிரச்சாரம் செய்யப்பட்டது. தனித்தனியே மூன்று பிரச்சார சைக்கிள் யாத்திரைக் குழுக்கள் பிரச்சாரம் செய்தன.

#### 28 ஊர்களில் முதல் குழு

முதலாவது குழு சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தில் உள்ள ராமநாயக்கன்பாளையம் கிராமத்திலிருந்து 5—4—72-ம் தேதி காலை 11-30 மணிக்குப் புறப்பட்டது. ஏ. பி. நாராயணன் தலைமையில் 8 தோழர்கள் விவசாயிகள் கோரிக்கைகளை வற்புறுத்தி பிரச்சார யாத்திரை புறப்பட்டனர். வட்ட வி. ச. செயலாளர் தோழர் ஆர். பி. ராமசாமி சைக்கிள் யாத்திரையைத் துவக்கி வைத்துப் பேசினார்.

விவசாய சங்க உறுப்பினர்களும், மார்க்சிஸ்ட் கட்சி உறுப்பினர்களுமான தோழர்கள் ஜி. கணேசன், பூமாலை, காளியப்பன். ராசு கே. கிருஷ்ணன், பெரியசாமி மாறன், ஏ.பி. நாராயணன் ஆகிய தோழர்கள் சைக்கிள் யாத்திரையில் கலந்துகொண்டனர்.

#### முதல் நாள்

முதல்நாள் (ஏப். 5-ல்) அம்பாசமுத்திரம், ராமநாதபுரம், ராமநாயக்கன்பாளையம், கல்பகனூர், புதூர், கொத்தாம்பாடி, பழனியாபுரி, அக்கிசெட்டிபாளையம், சொக்கநாதபுரம், மல்லிகரை ஆகிய ஊர்களில் கோரிக்கை நோட்டீஸ் வெளியிட்டும் பிரச்சாரம் செய்தும் இரவு மல்லிகரையில் தங்கினார்கள்.

#### 2-ம் நாள்

இரண்டாம்நாள் (ஏப்-6) அரசநத்தம், கந்தசாமிபுதூர், கீரிப்பட்டி, சிலயம்பட்டி. மேட்டூர், தாண்டவராயபுரம். நரசிங்கபுரம், சார்வாய், சார்வாய்புதூர், வடகுமரை, தென்குமரை, புனவாசல், நாவலூர், வேப்பம்பூண்டி, ஆரகளூர் ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்தனர். இரவில் ஆரகளூரில் தங்கினர்.

#### 3-ம் நாள்

மூன்றும் நாளான 7-ந் தேதி காலை ஆரகளூரிலிருந்து புறப்பட்டு, தேவனூர், தலைவாசல், தேவியாகுறிச்சி, காட்டுக்கோட்டை புதூர், காட்டுக்கோட்டை, ஆயற்பாடி, நரிக்குறவர் காலனி, அம்மம்பாளையம், துலுக்கனூர், கல்லாநத்தம், முள்ளுவாடி ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்து தங்களது மூன்றுநாள் சைக்கிள் பிரச்சார யாத்திரையை முடித்தனர். இரவில் ஆத்தூர் வந்து சேர்ந்தார்கள்.

சைக்கிள் யாத்திரை சென்ற 38 ஊர்களிலும் விவசாயிகள்மத்தியில் நல்ல வரவேற்பும் ஆதரவும் கிடைத்தது.

#### 16 ஊர்களில் இரண்டாவது குழு

சைக்கிள் யாத்திரையின் இரண்டாவது குழு 7—4—72-ம் தேதி காலை 6 மணிக்கு பெத்தநாயக்கன்பாளையம் கிராமத்திலிருந்து நகர விவசாய சங்க செயலாளர் கே. பொன்னுசாமி தலைமையில் துவங்கியது. சைக்கிள்களில் விவசாயிகள் கோரிக்கைகள் அடங்கிய அட்டைகளும்—செங்கொடிகளும் கட்டி—கோஷங்கள் முழங்கிக் கொண்டு புறப்பட்டார்கள். தோழர்கள் எம். பிரகாசம், மாணிக்கம், விஸ்வாமித்திரன், முத்துசாமி. ஆறுமுகம், ராமசாமி, மாரிமுத்து, ராமு ஆகிய 9 தோழர்கள் கலந்து கொண்டார்கள். சைக்கிள் யாத்திரையை கட்சியின் வட்டச் செயலாளர் தோழர் பி. ராசு துவக்கிவைத்துப் பேசினார்.

பெத்தநாயக்கன் பாளையத்திலிருந்து புறப்பட்டு. புத்திரகவுண்டன்பாளையம், கிருஷ்ணபுரம், வாழப்பாடி, அத்தனூர்பட்டி வேளூர், கொட்டவாடி, கல்வேரிப்பட்டி, ஏத்தாப்பூர், மேனாபுரம், துக்கியாம்பாளையம் ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்தும், கோரிக்கை நோட்டீஸ் வெளியிட்டும் கோரிக்கைகளை விளக்கினர். இரவு பெத்தநாயக்கன்பாளையத்தில் தங்கினார்கள்,

இரண்டாம் நாளான 8-ந் தேதி காலை 9 மணிக்கு பெத்தநாயக்கன் பாளையத்திலிருந்து புறப்பட்டு, தளவாய்ப்பட்டி, ஓலப்பாடி, தேனைப்பள்ளியூர், ஆரியபாளையம், உமையாள்புரம், கரடிப்பட்டி, தமையனூர், குமாரப்பாளையம், தாண்டானூர், பனமடல் ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்தனர். இரண்டாவது யாத்திரைக் குழு சென்ற 16 ஊர்களிலும் உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

#### மூன்றாவது குழு

மூன்றாவது குழு ஆனைவாம்பட்டி கிராமத்திலிருந்து 7—4—72ம் தேதி காலையில் புறப்பட்டது. தோழர்கள் எம். பழனிமுத்து எம். நாராயணன் ஆகியோர் தலைமையில் சைக்கிள் யாத்திரை துவங்கியது. தோழர்கள் சீனிவாசன், சுயம்பிரகாசம் சுப்பிரமணியம், கௌதமன், காசிராஜன், பழனிமுத்து, துரைசாமி, ரங்கசாமி ஆகிய 9 தோழர்கள் கலந்துகொண்டனர். ஆனையாம்பட்டியில் புறப்பட்டு, புதூர் திடாவூர், வீரகனூர் அக்கரை ராயன்பாளையம் ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்தனர்.

இரண்டாம் நாளான 8-ந் தேதி கெங்கவல்லி, 74, கிருஷ்ணபுரம், கூடமலை கணவாய்க்காடு ஆகிய ஊர்களில் பிரச்சாரம் செய்து, 2 நாள் யாத்திரையை முடித்து ஆனையாம்பட்டி திரும்பினார்கள்.

இந்தக் குழுக்கள் சென்ற இடமெல்லாம் உற்சாகமான வரவேற்பும் வாழ்த்துக்களும் கிடைத்தன.

#### போடி வட்டாரத்தில்

போடி, ஏப். 16 —

போடி வட்டாரத்தில் முதல் கட்டமாக ஏப்ரல் 2, 3 தேதிகளில் விவசாய இயக்கப் பாதயாத்திரை நடைபெற்றது. தோழர் பி. ராமர் தலைமையில் தோழர்கள் வெங்கடசுப்ரமணி, பாண்டியன் சங்கர் சின்னத்தம்பி, ரங்கசாமி, செல்லையா, ராமசாமி, செந்தட்டுக்காளை, சுருளி, கே. ராஜன் ஆகிய தோழர்கள் அடங்கிய குழுவினர் 2-ந் தேதி கோம்பையில் ஆரம்பித்து 35 கிராமங்களுக்குச் சென்றனர், மொத்தம் 60 இடங்களில் பிரச்சாரம் செய்து, 3-ந் தேதி பாதயாத்திரை முடிக்கப்பட்டது. எல்லா கிராமங்களிலும் பிரச்சாரப் பாதயாத்திரைக் குழுவினருக்கு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது. கட்சிப் பிரசுரங்கள் விற்கப்பட்டன.

இரண்டாம் கட்ட பிரச்சாரப் பாதயாத்திரை ஏப். 6, 7 தேதிகளில் நடந்தது. தோழர் எம். சிவணு தலைமையில் 11 தோழர்கள் பி. ரங்கநாதபுரத்தில் ஆரம்பித்து 28 கிராமங்களுக்குச் சென்றனர். மொத்தம் 46 இடங்களில் பிரச்சாரம் செய்து 7,ம் தேதி முடித்தனர்.

எல்லாக் கிராமங்களிலும் பாதயாத்திரை குழுவினர்களுக்கு பொது மக்கள் சிறப்பான வரவேற்பு கொடுத்தனர். கட்சி பிரசுரங்கள் விற்கப்பட்டன.

#### பழனி தாலுகாவில் சத்திரப்பட்டி பகுதியில்

ஏப்ரல் 9ம் தேதி சத்திரப்பட்டி பகுதியில் தாலுகா கமிட்டி மெம்பர் தோழர் டி. சண்முகம் தலைமையில். எம். கருணாகரன், தம்பித்துரை மற்றும் 5 பேர் கொண்ட பாதயாத்திரை குழு புதுக்கோட்டை, தாசரிபட்டி, வேலூர், சத்திரபட்டி ஆகிய ஊர்களுக்குச் சென்று பிரச்சாரத்தை முடித்தனர்.

#### ஒட்டன் சத்திரம் பகுதியில்

ஏப்ரல் 8, 9 தேதிகளில் தோழர்கள் எஸ். கருப்பணன், கே. எஸ். பழனி முத்து, பெருமாள் முருகன் பெருமாள் ஆகியவர்கள் சைக்கிளில். வடக்கே இடைய கோட்டை வரை 50 க்கு மேற்பட்ட கிராமங்களுக்குச் சென்று விவசாயிகளின் கோரிக்கையை விளக்கமாகப் பிரச்சாரம் செய்தனர்.

---

## வடாற்காடு மாவட்டத்தில் விவசாயிகள் ஆர்ப்பாட்டம்

குடியாத்தம், ஏப். 17—

வடாற்காடு மாவட்டத்தில் விவசாயிகள் தங்களின் கோரிக்கைகளை நிறைவேற்றக்கோரி ஏப். 10-ல் மாவட்ட கலெக்டர் ஆபீஸ் மற்றும் தாலுகா. ஆர். டி. ஓ ஆபீஸ்கள் முன்பு ஆர்ப்பாட்டங்கள் செய்தனர்.

மாவட்டத் தலைநகரான வேலூரில் உள்ள கலெக்டர் அலுவலகம் முன்னால் தோழர் வி.கே. கோதண்டராமன், வி. முனிசாமி, நகர மன்ற உறுப்பினர் அத்தாவுல்லா, பரமசிவம், பூ. கோவிந்தராசன், பி சிவலிங்கம் ஆகியோர் தலைமையில் ஆர்ப்பாட்டம் செய்து கோரிக்கை மனுவை அளித்தனர்.

திருப்பத்தூர் சப்-கலெக்டர் அலுவலகம் முன்னிலையில் தோழர் கே. கிருஷ்ணசாமி தலைமையிலும்,வாணியம்பாடி தாலுகா ஆபீஸ் முன்பு தோழர்கள் சூசைநாதன், அனீப் ஆகியோர் தலைமையிலும், ராணிப்பேட்டை ஆர்.டி.ஓ. அலுவலகம் முன்பாக தோழர்கள் ஆர். ஏ, கண்ணன்' பரசுராமன் ஆகியோர் தலைமையிலும் விவசாயிகள் அணிதிரண்டு ஆர்ப்பாட்டம் செய்து மக

(5- [illegible] பார்க்க)

---

#### சிம்சன் தேர்தல் எதிரொலி

# குடந்தை எஸ். ஆர். வி எஸ். ஸில் தி. மு. க. வினர் மீண்டும் வன்முறை

கும்பகோணம், ஏப்.17—

சிம்சன்குரூப்பைச்சேர்ந்த குடந்தை எஸ். ஆர். வி எஸ். ஸில் தி மு. க. வினர் மீண்டும் வன்முறையில் ஈடுபட்டு வருவதாகத் தகவல் வந்துள்ளது.

சிம்சன் தொழிற் சங்கத்திற்கு தேர்தல் நடைபெறுகிற அறிவிப்பு வெளிவந்தவுடன் மாற்றுச் சங்கத்தினரை தி.மு.க வினர் ஏசியும், மிரட்டியும்,தாக்கியும்உள்ளனர் சிம்சன்குரூப் சங்கத்திலிருந்து ராஜினாமாசெய்ய வேண்டும்என்று வற்புறுத்தி வருகிறார்கள், இது குறித்து எஸ் ஆர் வி எஸ். ஸில் பணிபுரியும் தொழிலாளர்கள் சார்பாக மாநில முதலமைச்சர், தொழிலாளர் நல அமைச்சர், சிம்சன் குரூப் கம்பெனி தேர்தல் அதிகாரி, மாவட்டக்கலெக்டர், போலீஸ் அதிகாரி ஆகியோர்களுக்கு புகார் செய்யப்பட்டுள்ளது.

அப்புகார் கடிதத்தில் எம் கலியமூர்த்தி, எஸ் கணேசன், ஆர். செல்லப்பன். ஆர், ராமசாமி ஆர். சிவநேசன், எம், ராஜப்பா, செல்வராஜ் உட்பட 10 தொழிலாளர்கள் கையொப்பமிட்டுள்ளனர். அக்கடிதத்தில் கூறப்பட்டிருப்பதாவது:—

"தமிழக முதல் அமைச்சர் முன்புஏற்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில், அரசினரால் நியமிக்கப்பட்ட தேர்தல் அதிகாரி தொழிற் சங்கத் தேர்தல்களுக்கு அதன் விதிமுறைகளையும் தேதியையும் அறிவித்து 10-4-72 முதல் நாமினேஷனும். 19-4-72க்குப் பிறகு 24—4—72க்குள் தேர்தல் என்ற செய்தி அறிவிப்பு வந்ததும், மீண்டும் தி.மு.க. வினரைச்சேர்ந்த ஒரு வன்முறை கோஷ்டியினர் தொழிலாளர்களைமிரட்டிக் கொண்டே இருக்கிறார்கள். நிர்ப்பந்தமாக சிம்ஸன் குரூப் தொழிற்சங்கத்திலிருந்து ராஜினாமா செய்ய வேண்டும்என்றுவற்புறுத்துவது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறார்கள்.

இவைகளினியில் 12-4-72 அன்று மாலை கம்பெனியைச்சேராதவெளியாட்களும். சில குண்டர்களும் எஸ். ஆர். வி. எஸ். தொழிற்சாலை முன்பாகக் கூடி எஸ். ஆர். வி எஸ். தொழிலாளர்களை ஏசியும் பேசியும் வருகிறார்கள்.

ஏற்கனவே, 29—2—72 அன்று திரு, செல்வராஜ் என்ற தொழிலாளியை, வேலைக்கு வந்தவரை, தொழிற்சாலை வாசலில் தி மு க, குண்டர்கள் தாக்கினார்கள். அந்தத் தொழிலாளி மருத்துவ விடுதிக்குப் பிறகு வேலைக்கு திரும்ப இருப்பவரை கம்பெனிக்கு வராதவாறு அச்சுறுத்தப்பட்டுவருகிறார்.

எனவே, தொழிலாளர்களைத் தாங்கள் சுயேட்சையாகத் தொழிற்சங்கப் பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பதற்கும், முறையான தேர்தல் நடக்கவும், முதலமைச்சர் அவர்களின் ஒப்பந்தப்படி எஸ். ஆர். வி. எஸ். தொழிலாளர்களுடைய உரிமையைப் பெறுவதற்கும், தொழிலாளர்கள் உயிருக்கும் வேலைக்கும் சகல பாதுகாப்பும் அளிக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்." இவ்வாறு அக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

---

## மூணாறு போஸ்டாபீஸில்

# போலீஸ், குண்டர்கள் ரகளை

### அலுவல் ஸ்தம்பித்துக் கிடக்கிறது

மூணாறு ஏப் 16 —

கடந்த 11-ஆம்நாளன்று மூணாறு சப்-இன்ஸ்பெக்டர், சிவில் டிரஸில் யாதொரு அனுமதியுமின்றி போஸ்டாபீஸினுள் புகுந்து விசாரணையின் பெயரால் ரகளை செய்ததாகக் கூறப்படுகிறது. சப்-இன்ஸ்பெக்டரின் இந்தச் செயலை ஆட்சேபித்தபோது ஐ என் டி. யூ. சி.க்காரர்களையும் குண்டர்களையும் கண்ணடித்துவிட்டு அவர்களையும் ரகளை செய்யும்படிச் செய்தாராம். இதனால் போஸ்டாபீஸ் இழுத்து மூடப்பட்டது.

போலீஸ் குண்டர்களின் ரகளையை ஆட்சேபித்து உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று மேலிடத்திற்கு தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன.

---

# கல்கத்தா மாநகராட்சி கலைக்கப்பட்டதற்கு

### மேயர்கள் கண்டனம்

புதுடெல்லி, ஏப். 17—

அகில இந்திய மேயர்களின் நிர்வாகக்குழு கூட்டம் இரண்டு நாட்களுக்கு முன் டெல்லியில் கூடியது.

அக்கூட்டம், கல்கத்தா மாநகராட்சி மேற்கு வங்க அரசாங்கத்தினால் வேண்டுமென்றே திட்டமிட்டுக் கலைக்கப்பட்டதற்கு கடும் கண்டனம் முழங்கியுள்ளது.

மேயர்கள் நிர்வாகக் குழு தனது தீர்மானமொன்றில் மேற்குவங்க அரசாங்கம் இவ்வாறு கல்கத்தா மாநகராட்சியைத் திட்டமிட்டு கலைத்ததற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

---

#### லஞ்சம் கொடுக்காததால்

## ரூ. 220 டெலிபோன் பில் 22 ஆயிரம் ஆயிற்று

### ரசமான வழக்கு

புதுடெல்லி, ஏப். 15—

டெலிபோன் இலாகா அதிகாரிகள்செய்யும் ஊழல் பற்றி நாடாளுமன்றத்தில் கேள்வி எழுப்பப்பட்டது.

அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்க மறுக்காதால் ஒருவரின் டெலிபோன் பில் 220 ரூபாயிலிருந்து 22 ஆயிரமாக உயர்த்தப்பட்டது. இதை ஆட்சேபித்து நீதிமன்றத்தில் தொடரப்பட்ட வழக்கில் இந்த அநியாயத்தைக் கண்டித்து தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

இது போன்று டெலிபோன் இலாகா உயர் அதிகாரிகள் மட்டத்தில் லஞ்சம் புகுந்து விளையாடுகிறது.

ஆனால் இந்த ஊழல் கண்டு பிடிக்கப்பட்டால் அதிகாரிகள் தண்டிக்கப்படுவதில்லை. மாறாகபெரும்பாலும் சாதாரண ஊழியர்களே தண்டிக்கப்படுகின்றனர் ஊழல் அதிகாரிகள் தப்பித்துக் கொள்கின்றனர்.

---

# ஒற்றுமையை குலைக்க வேண்டாம்

## என். ஜி. ஓ. தலைமைக்கு மதுரை மாவட்டக் குழு வேண்டுகோள்

மதுரை, ஏப். 16—

தமிழ்நாடு என். ஜி. ஓ. சங்கத்தின் மாநில உப தலைவரையும்—மாநில பொருளாளரையும், மாநிலத் தலைவர் வேறு யாருடனும் கலந்து ஆலோசியாமல் சஸ்பெண்டு செய்திருப்பது சங்க விதிகளுக்கே முரண்பாடானது என்றும் சங்க ஒற்றுமையை பாதிப்பதாக உள்ளது என்றும் இந்த சஸ்பெண்டு நடவடிக்கையை வாபஸ் பெறவேண்டுமென்றும் 11—4—72-ல் மதுரையில் நடந்த,மதுரைமாவட்ட சங்க நிர்வாகக் குழு கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன் விபரமாவது:

என் ஜி ஓ சங்கத்தில் பிளவு உள்ளது என்பதை மறந்து சங்கத்தில் பிளவு கூறுவதெல்லாம் வெறும் கற்பனையில் பிறந்த கதைத்திகளே என்று ஆணித்தரமாக அடித்துச் சொல்லியிருந்த செய்தியினை சில நாட்களுக்கு முன்புதான்' மார்ச் 31ம் நாள் பத்திரிகைகளில் படித்தோம்.

நிலைமை இப்படி இருக்கையில், இரு மத்திய நிர்வாகக் குழு உறுப்பினர்களை திடீரென்று, அறிக்கைவிட்ட ஒரு வாரத்திற்குள் சஸ்பெண்ட் செய்யுமளவிற்கு என்ன அப்படிப் பெரிய அசம்பாவிதச் செயல் நடந்துவிட்டது என்பது எங்களுக்குத் தெரியவில்லை

மூன்றுலட்சம் உறுப்பினர்களைக்கொண்ட என். ஜி ஓ சங்கத்தில் கோரிக்கைகளை முன் வைப்பதிலும், அதை விரைவில் அடைவதற்கு செய்ய வேண்டிய செயல் முறைகளைப்பற்றியும், இவைகளைப் பற்றியும் முடிவு செய்வதில் கருத்துவேறுபாடுகள் இருப்பது சகஜம் தான்.

இந்த வேறுபாடுகள் தேவையில்லாமல் திரித்துக் கூறப்பட்டு, பெரிதுபடுத்தப்பட்டு தங்களுடன் இணைந்து ஒரே தேர்தல் அறிக்கையின் அடிப்படையில் தேர்தலில் நின்று வெற்றி பெற்ற இரு நிர்வாகக்குழு உறுப்பினர்களை சஸ்பெண்ட் செய்திருப்பது ஒரு துரதிர்ஷ்டவசமானது துரதிர்ஷ்டவசமானது.

சஸ்பெண்ட் செய்யப்படுவதற்கு முன்பு அந்த மத்திய நிர்வாகக்குழு உறுப்பினர்களுக்கு, அவர்களின் மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றங்களை விளக்குமாறு ஒரு 'சோகாஸ்' நோட்டீஸ் கூட கொடுக்காதது மிகவும் வருந்தத் தக்கது.

சங்கபைலாவின் 22ம் பிரிவுப்படி, ஏதாவது முக்கிய பிரச்சினைகளின் மீது முடிவெடுக்க வேண்டுமெனில் அதற்குமுன் மற்ற நிர்வாகக்குழு உறுப்பினர்களுடன் கலந்தாலோசிக்க வேண்டும் என்ற விதிமுறையைக் கூட சங்கத்தலைவர் மதிக்கவில்லை.

மேலும், மத்திய நிர்வாக உறுப்பினர்களை இவ்வாறு சஸ்பெண்ட் செய்திருப்பது சங்க சட்டதிட்டங்கள்,விதிமுறைகளுக்கு புறம்பானது சங்கத் தலைவர் இவ்வாறு மற்ற நிர்வாகக்குழு உறுப்பினர்களை சஸ்பெண்ட் செய்வதற்கு சட்டதிட்டங்கள் அவருக்கு அதிகாரம் அளிக்கவில்லை.

சங்கத் தலைவரின் இந்த நடவடிக்கையும், அதை எதிர்த்து தங்கள் பக்கம் இருக்கும் நியாயத்தை பாதிக்கப்பட்ட மத்திய நிர்வாகக் குழு உறுப்பினர்கள் எடுத்துக் கூறுவதும்—சங்க ஒற்றுமையையும் அதன் ஒருமித்த தன்மையையும் சீர்குலைக்கும்.

இந்த விசயத்தை மத்திய நிர்வாகக்குழு உறுப்பினர்கள் தங்களுக்குள் பேசித் தீர்த்துக் கொண்டிருக்கலாம்.

லட்சக்கணக்கான என். ஜி. ஓ.க்களுக்கும், அரசு ஊழியர்கட்கும் பாதகமாக இந்த விஷயத்தை மத்திய சங்க உறுப்பினர்கள் தங்களுக்குள் பேசித் தீர்த்துக் கொள்ளாமல் இவ்வாறு வெளிப்படுத்துவதற்கு மதுரை மாவட்டக்குழு தன்னுடைய வருத்தத்தை தெரிவித்துக் கொள்கிறது.எனவே சங்க ஒற்றுமையை ஊழியர்களிடத்திலும் தலைவர்களிடத்திலும் நிலைநாட்ட, மாநில சங்கத் தலைவர் தனது நடவடிக்கையை வாபஸ் பெற்றுக் கொண்டு மீண்டும்பழைய நிலையை உருவாக்க மதுரை மாவட்டக்குழு வேண்டுகிறது.

---

#### மதுரையில்

## நெசவாளர் கைதுக்கு கண்டனக் கூட்டம்

மதுரை, ஏப். 17—

கலெக்டர் முன்னிலையில் செய்து கொண்ட ஒப்பந்தத்தை சில மாஸ்டர் வீவர்கள் அமுலாக்காததையும் மாஸ்டர் வீவர் கன்னையா வீட்டுமுன் அமைதியாக உட்கார்ந்திருந்த 8 நெசவாளர்களைப் போலீஸ் கைது செய்ததைக் கண்டித்தும், செல்லூர் களத்துப் பொட்டலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பொதுக்கூட்டம்நடைபெற்றது கூட்டத்துக்கு தோழர் டி.ஆர் ஆறுமுகம் தலைமை வகித்தார்.

தோழர்கள் எம் கணபதி, பி. கல்யாணசுந்தரம் எம். குமாரசாமி, கே. தங்கமுத்து, ஐ. மாயாண்டி பாரதி, என். நன்மாறன் ஆகியோர் பேசினர்.

#### தி. மு. க. விலிருந்து மூவர் விலகல்

கைத்தறி நெசவாளர் போராட்டத்துக்கு தி. மு. க. தலைமை செய்த துரோகம் பிடிக்காமல் அக்கட்சியிலிருந்து விலகுவதாக மேடையில் எஸ் ஏ. ராமையா, கே ராமகிருஷ்ணன்,(விலைவாசிப்போராட்டத்தில் சிறை சென்றவர்கள்), ரத்தினம் ஆகியோர் அறிவித்தனர்.

கலெக்டர் முன்னிலையில் செய்த ஒப்பந்தத்தை சில மாஸ்டர் வீவர்கள் அமுலாக்காததற்கு நடவடிக்கை எடுப்பதற்கு பதிலாக நெசவாளர்களைக் கைது செய்திருப்பதைக்கண்டித்து கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

---

#### அரசுக் கடனுக்காக

## ஏழை நெசவாளர் வீடுகளை ஜப்தி செய்ய முயற்சி

### மார்க்சிஸ்ட் கட்சி முயற்சியால் நிறுத்தப்பட்டது

குமாரபாளையம், ஏப். 17—

குமாரபாளையத்தில், கடன்களுக்காக ஏழை நெசவாளர்களின் வீடுகளை ஜப்தி செய்த அரசு அதிகாரிகளின் முயற்சி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் முயற்சியால் நிறுத்தப்பட்டது. கடன்வசூலை தள்ளிப்போட மாவட்டக் கலெக்டர் ஒத்துக்கொண்டார்,

இது பற்றிய விபரமாவது :-

#### திடீர் உத்திரவு

குமாரபாளையத்தில் கடந்த 1969-ம் ஆண்டு கடைசியில் பலத்த மழை பெய்து பெரும் வெள்ளம் ஏற்பட்டு நூற்றுக்கணக்கான வீடுகளும தறி,பட்டு, நூல், ஜரிகை ஆகியவைகளும் பெரும் சேதம் அடைந்தன. அப்போது சேதமடைந்த வீடுகளை புதுப்பித்துக் கொள்ளக் கடனும் கைத்தறி சம்பந்தமான சேதமான பொருள்களை வாங்க தனிக் கடனும் சர்க்காரால் கொடுக்கப்பட்டன. தற்சமயம் பாகிஸ்தான் போரினாலும் நூல் விலை ஏற்றத்தாலும் கைத்தறி நெசவாளர்கள் அல்லல் பட்டுக் கொண்டிருக்கும் பொழுது திடீரென சர்க்கார் மேற்படி இரண்டு வகைக் கடன்களையும் 31.1-72 ந்தேதிக்குள்கட்ட வேண்டும்என உத்திரவு பிறப்பித்தது.

#### ஜப்திசெய்ய தண்டோரா

ஆனால்நெசவாளர்களால் அத்தவணைகள் ரூபாய் கட்டமுடியவில்லை பின்னர் தாசில்தார் கடந்த 28—3—72-ந் தேதி தண்டோரா போட்டு வீடுகளை ஜப்திக்கு கொண்டு வந்திருப்பதாக சொல்லி சில வீடுகளுக்குச் சென்று தட்டுமுட்டு சாமான்களை எடுக்க முற்பட்டார் நெசவாளர்கள் தங்களுக்கு வேண்டியவர்களிடம் கடன் வாங்கி தொகையை கொடுத்தனர்.

#### மார்க்சிஸ்ட் கட்சியிடம் முறையீடு

தொகையைக் கட்ட முடியாத சிலர், குமாரபாளையம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் எம். பழனிச்சாமியிடம் சென்று முறையிட்டனர். தோழர் பழனிச்சாமி முயற்சி எடுத்துக் கொண்டதின் பேரில்—சேலம் ஜில்லா கலெக்டரிடம், அன்றே சென்று பார்த்து நெசவாளர்களின் அவல நிலையை எடுத்துக் கூறினார் கடனை ரத்து செய்ய வேண்டும் என வற்புறுத்தினார் கடனை ஒரு மாதத் தவணையில் கட்ட வேண்டும் எனவும், தற்சமயம் ஜப்தி நடவடிக்கைகளை ஒத்தி வைப்பதாகவும் கலெக்டர் சொன்னார். திரு ராஜண்ணன் (திமுக) ஜெ. எம். சி நடராஜன் (ஸ்தாபன காங்கிரஸ்) பி சித்தப்பன் (ஸ் காங்) வேணுகோபால் (வ. கம்யூ) ஆகியோரும் கலெக்டரைச் சந்தித்துப் பேசினர்.

---

## நடக்க இருப்பவை

தஞ்சை மாவட்ட மருத்துவ சமூக சவரத் தொழிலாளர் சங்க மாநாட்டு வரவேற்புக் குழுக் கூட்டம் 19—4—72 மாலை 2—30 மணிக்கு மாயூரம் பயணிகள் விடுதியில் நடைபெறும்.

---

(1-ம் பக்க தொடர்ச்சி)

ஜர்கள் சமர்ப்பித்தனர்.

"தமிழகம் முழுவதும் கூலி நிர்ணயச் சட்டம் கொண்டுவா"

குத்தகை விவசாயிகளை வெளியேற்றாதே! விவசாயத்தில் எந்திரங்களைப் புகுத்தி வேலையைப் பறிக்காதே! நீர்ப்பாசன அணைகள் கட்டு! விதிவிலக்குகளை ரத்து செய்!" போன்ற முழக்கங்களை எழுப்பிக் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்வதற்கு முன்பு ஊர்வலம் வந்தனர்.

# கண்ணோட்டம்

# கோவில், மடப் பெருச்சாளிகளுக்கு குடைபிடிக்கும் இரகசியம்

காலஞ்சென்ற தி. மு. க. தலைவர் அண்ணாத்துரை, அந்தக் காலத்திலே சொன்னார், ''கல்லுச் சாமிகளுக்கும் செம்புச்சாமிகளுக்கும் கனகமணி மகுடம் எதற்கு? பட்டுப் பீதாம்பரம் எதற்கு? பவுன் காசு மாலைகள் எதற்கு? ஆறுகாலப் பூசை எதற்கு? தேரு எதற்கு? திருவிழா எதற்கு? குடம் குடமாய் பாலையும் தேனையும் சாமி தலையில் கொட்டுவது எதற்கு?''.........இப்படி யெல்லாம் பேசுவார்; எழுதுவார்!

அவர் அப்படி யென்றால்,......... கலைஞர் கருணாநிதியோ அதற்கு மேலே ஒரு அடி பாய்ந்து,

''ஏரோட்டும் உழவரெல்லாம்
ஏங்கித் தவிக்கையிலே
தேரோட்டம் ஏதுக்கு தியாகராசா!''

என்று அழகாக, அடுக்குச் சொல்லிலே தொடுத்துச் சொல்லுவார். ''அதெல்லாம் அந்தக் காலம்! ஆட்சிக் கட்டிலில் அமராத காலம்!''... என்று நாம் பெருமூச்சு விட்டால்... ''ஏன், இந்தக் காலத்தில்தான் என்னவாம்? கொள்கையிலே என்ன மாற்றம் கண்டீர்? குணத்திலே என்ன திருப்பம் கண்டீர்? எங்கள் இலட்சியம் உழவனுக்கு நிலம்! எங்கள் குறி பொதுவுடைமைப் பூங்கா!'' ...என்று இன்னும் அதட்டிச் சொல்லும் தி மு.க. அன்பர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்குச் சொல்லுகிறோம்:

''அன்புசால் நண்பர்களே!

திருப்பனந்தாள் தருமபுரம்
திருவாவடுதுறை மடங்கள் போன்ற

தஞ்சாவூருப் பக்கமுள்ள
தம்புரான்கள் மூவருக்கும்

நஞ்சையிலே கிட்டத்தட்ட
நாலு லட்சம் ஏக்கராவை......

ஆண்டவன்தான் சர்வே போட்டு
அளந்து வச்சானா......இல்லே

அவனவனே கெடச்சதெல்லாம்
அமுக்கிக் கிட்டானா?''

என்று நாம் கேள்வி எழுப்புகின்றபோது......ஆட்சிபீடத்தில் சழகத் தலைவர்கள் அமர்ந்து ஆண்டுகள் ஐந்தும் உருண்டோடிய பின்னரும்......இந்த மடப் பெருச்சாளிகளுக்கும், கோயில் பெருச்சாளிகளுக்கும் உச்சவரம்பு கொண்டுவராமல், காங்கிரஸ் ஆட்சி அனுமதித்தது போலவே, கழக ஆட்சியும் இத்தனை லட்சம் ஏக்கர் நிலத்திலும் அந்தப் பெருச்சாளிகளை இஷ்டம்போல கொட்டமடிக்க விடுகிறதே, இது நியாயமா? இதுதான் பொதுவுடமையா? இதுதான் பூங்காவா?—என்று நாம் கேட்கின்றபோது......

அதற்கு தி. மு. க. அன்பர்கள் என்ன பதில் சொன்னார்கள் தெரியுங்களா!

''அதற்குதான் எங்கள் கழக அமைச்சர்கள் பதில் சொல்லிவிட்டார்களே! கோயில் நிலங்களையும் மடநிலங்களையும் விடப்போவதில்லை. அது ஒரு அனைத்து இந்தியப் பிரச்னை, தனியாக ஒரு மாநில அரசு எதுவும் செய்துவிட முடியாது. என்றாலும் கோயில் மடநிலங்களுக்கும் உச்சவரம்பு வரத்தான் போகிறது!''—என்று பதில் சொன்னார்கள்.

பாவம், இந்த அன்பர்கள் என்ன செய்வார்கள். கழக அமைச்சர்கள் சொல்லுவதெல்லாம் உண்மையென்று நம்பும்படியாக, அவ்வளவு வர்ணஜாலங்களையும் வாணவேடிக்கைகளையும் விட்டிருக்கிறார்கள்!...

எதற்கு இந்த முன்னுரை என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்.

சென்ற வாரம் புதுடெல்லியிலே மாநில முதல்வர்கள் மாநாடு நடந்தது. அந்த மாநாட்டுக்குத் தலைமை வகித்த மத்திய உணவு அமைச்சர் பக்ருதீன் அலியும், மற்றொரு மத்திய அமைச்சர் மோகன் தாரியாவும் 'நில வுடைமை உச்சவரம்புச் சட்டத்தில் கண்டுள்ள சகல விதி விலக்குகளையும் ரத்துச் செய்துவிடவேண்டும்; கோயில் நிலங்கள், மட நிலங்கள், கல்வி மற்றுமுள்ள டிரஸ்டு நிலங்கள் அனைத்துக்குமே உச்சவரம்பு கொண்டுவரவேண்டும். விதி விலக்குக்கூடாது'' —என்று வற்புறுத்தினார்கள்.

அதுமட்டுமல்ல. ''கோயில்கள், மடங்கள் ஆகியவற்றின் உபரி நிலங்களை அரசாங்கமே ஏற்றுக்கொண்டு—கோயில் செலவுகளுக்கும் மடங்களின் நிர்வாகச் செலவுகளுக்கும், வருடா வருடம் அரசாங்கமே குறிப்பிட்ட தொகையை அளிக்கவேண்டும்'' என்று பேசியிருக்கிறார்கள்.

மத்திய அரசின் இந்தக் கருத்து, தி. மு. கழக மாநில அரசுக்குப் பிடிக்கவில்லை. தமிழக அரசு சார்பில் சென்ற வருவாய்த்துறை அமைச்சர் ப. உ. சண்முகம் மத்திய அரசின் திட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தாராம்.

பொத்தாம் பொதுவாக, மொட்டையாக எதிர்த்தால் முடியுமா? அதற்கு ஒரு காரணமும் சொன்னாராம்; என்ன காரணத்துக்காக எதிப்புத் தெரிவித்தார் என்பதை சென்னைக்கு வந்தபின் 15—4—72-ல் கூறியிருக்கிறார். எப்படி?

''கோயில்கள், மடங்கள் ஆகியவற்றின் நிலங்களை அரசு ஏற்று, அவற்றுக்கு வருடா வருடம் நிருவாகச் செலவுக்காக பணம் அளிக்க வேண்டும் என்ற திட்டத்தினால்... மாநில அரசுக்கு தேவையற்ற செலவுச் சுமை ஏற்பட்டுவிடும். ஆண்டுதோறும் தமிழக அரசு ரூ. 4 கோடி முதல் 5 கோடிவரை கொடுக்கவேண்டியிருக்கும் என்று மாநாட்டில் கூறினேன்.

''அது மட்டுமல்ல. இந்துக் கோயில்களின் நிலங்களை எடுத்துக் கொண்டால், பிறகு கிறிஸ்துவ சர்ச்சுகள், முஸ்லிம் மசூதிகள் ஆகியவற்றுக்குச் சொந்தமான நிலங்களையும் எடுத்துக்கொண்டு பணம் கொடுக்கவேண்டியிருக்கும் என்று கூறினேன்'' என்பதாகத் தெரிவித்துள்ளார்.

இப்படி நம்ம திருவண்ணாமலை அமைச்சர் ப. உ. சண்முகம் காரண காரியத்தோடு, ''அண்ணாமலைக்கு அரோகரா! கோயில், மட நிலங்கள் கிடைக்கும் என்று ஆசையோடு எதிர்பார்க்கும் ஏழை உழவனுக்கெல்லாம்... அரோகரா!''— என்று அரோகரா போட்டுவிட்டு வந்திருக்கிறார்.

இந்த அண்ணாமலை அரோகராவைத் தொடர்ந்து ஆந்திர முதலமைச்சரும் அரோகரா போட்டாராம்! உச்சவரம்பு இல்லாமல் இருந்தால்தான் டிராக்டர்விட்டு உழவுசதி ஏற்படும் என்று கூறி, பஞ்சாப் முதலமைச்சரும் அரோகரா [போட்டாராம்! அத்தனை பேரும் அரோகரா போடுகிறபோது மத்திய மந்திரிகள் சும்மா இருக்க முடியுமா? அவர்களும் அரோகராப் போட்டுவிட்டுப் போனார்களாம்!... கவனித்தீர்களா, கதை போகிற போக்கை!

ஆரம்பத்தில் என்ன சொன்னார்கள்? கோவில் நிலங்களுக்கும், மட நிலங்களுக்கும் உச்சவரம்பு கட்டும் பிரச்னை, ஒரு அனைத்து இந்தியப் பிரச்னை என்று சொன்னார்கள்.

அப்படிச் சொன்னவர்கள் மத்திய அரசே முன் வந்து, கோயில் மட நிலங்களை, அரசே ஏற்று நடத்து! —என்று வற்புறுத்துகின்றபோது சரி என்று சம்மதிக்க வேண்டாமா?... சம்மதித்தார்களா?... இல்லையே!... ஏன்?...

அதற்குப் பதிலாக என்ன சொல்லுகிறார்கள்?... ஆண்டுக்கு 4 கோடி, 5 கோடி செலவுச் சுமை ஏற்படும் என்கிறார்கள்... அது, தமிழக அரசுக்குக் கட்டுபடி ஆகாது என்கிறார்கள்... ஒரு சில ஆயிரம் ஏக்கர் நிலங்களே வைத்திருக்கிற மசூதிகளையும், மாதா கோயில்களையும் உசுப்பிவிட்டு, தமிழ் நாட்டில் மொத்தமுள்ள நிலத்தில் மூன்றிலொரு பங்கு நிலமுள்ள கோயில், மட நிலங்களை பெருச்சாளிகள் மேய வழி தேடுகிறார்கள்!... என்ன ஜாலக்கு பார்த்தீர்களா?

இன்னொரு சமாச்சாரம். உழவர்களுக்கு நிலம் கிடைப்பதுபற்றியமுக்கியமான இப்பிரச்னைபற்றி பேசும் போது...அந்த மாநாட்டுக்கு எல்லா மாநில முதல்வர்களும் சென்றிருந்தபோது...நமது தமிழக முதல்வராம், கலைஞராம், டாக்டராம் மு. கருணாநிதி சென்றிருக்க வேண்டாமா?...சென்றாரா?...இல்லையே!...ஏன்?...

''ஏரோட்டும் உழவரெல்லாம் ஏங்கித் தவிக்கையிலே, தேரோட்டம் எதுக்கு தியாகராசா?''...என்று பாட்டுப் பாடினவர் இவர்தானே! இவர் போகவில்லையே? ஏன்?...

கோவில், மட நிலங்களை பெருச்சாளிகள் மேயத்தான் விடுவேன் என்று இந்த சமதரும வீரர் சொன்னால், சந்தி சிரித்துவிடும் என்று தான், அண்ணாமலை வீரரை அனுப்பி, அரோகரா போடச்சொல்லியிருக்கிறார்...நெருப்பு சுடுதா, இல்லையா என்று சோதித்து அறிய, குட்டிக் குரங்கின் கையைப்பிடித்து நெருப்பில் காட்டியதாம் தாய்க் குரங்கு!...அந்தக் கதைபோல இல்லையா, இந்தக் கதையும்!...

இந்த கோயில்களையும் மடங்களையும் நிர்வகிக்க 4 கோடி ஆகும், 5 கோடி ஆகும் என்கிறாரே, அமைச்சர், அவரைத்தான் கேட்கிறோம், எதுக்கய்யா, இவ்வளவு செலவு?''—என்று.

சாமிகளின் பேரைச் சொல்லி......அந்தப் பூசை இந்தப் பூசை என்று ஆயிரம் பூசைகளைச் சொல்லி...... ஒண்ணுக்குப் பத்தாகப் பொய்க்கணக்குப் போட்டு...... அத்தனை பணத்தையும் இந்த ஆசாமிகளே விழுங்கி ஏப்பம் போடுவது, யாருக்குத்தான் தெரியாது?

கேரளத்திலே பத்மநாபசாமி கோயில் நிலத்தை அரசாங்கமே எடுத்துக்கொண்டது. கோயில் நிர்வாகங்களும் பராமரிப்புகளும் நல்லமுறையில் நடக்கவில்லையென்று இந்த அண்ணாமலைகளிடமும் ஆரூர்க் கலைஞரிடமும் யாரு வந்து முறையிட்டார்கள்?......ஏன், அதுமாதிரி இங்கும் எடுக்கக் கூடாதோ?......எடுத்து நடத்தினால் தேரு ஓடாதோ?......திருவிழா நடக்காதோ?......யாருகிட்ட கதை!......

கோயில்களுக்கும் மடங்களுக்கும் நிலத்திலிருந்து மட்டுமா வருமானம் வருகிறது!.........பக்தகோடிகளுக்குப் பஞ்சமா என்ன நம்ம நாட்டிலே......... முருகனுக்கு நேர்ந்து மொட்டையடிப்பவர்கள் எத்தனை கோடி?...ஆயன் பெருமாளுக்கும் மாயாவதாரன் அழகு மலைச்சாமிக்கும் திரி எடுத்து ஆடுகிறவர்கள் எத்தனை கோடி? திருக்குவளை அங்காளம்மன் கோவிலுக்குப் பொங்கப் பானை சுமக்கிறவர்கள் எத்தனை லட்சம்?... ...இப்படி ஊர் ஊருக்கு எத்தனையெத்தனை சாமி? ...எத்தனையெத்தனை திருவிழா?... எத்தனை கோடி பக்தர்கள்? ...எத்தனையெத்தனை லட்ச ரூபாய் காணிக்கை?... காணிக்கையிலே பொற்கிரீடங்கள் என்ன?... பொன்னுடைகள் என்ன?... ...வைர, வைடூரிய மோதிரங்கள் என்ன?... ...சும்மாவா பாடினான், ''மதுரை மீனாட்சி மாணிக்க மூக்குத்தி... மதுரையிலே திருக்கல்யாணம்'' என்று?

இவ்வளவு காணிக்கைப் பணமும் போதாதோ? இதுக்கு மேலே நிலம் எதற்கு? அதுக்கு மேலே உண்மையாகவே செலவு இருந்தால், அதுக்குத்தான் சர்க்கார் பணம் இருக்குதே......அது என்ன கோடிக்கணக்கிலா ஆகும்?......யாருகிட்ட பர்பராட்டு வித்தை?......

உண்மை இரகசியம் என்னவென்றால், இதுதான். ஒருவரிடமும் சொல்லாதீர்கள்!

தி. மு. கழகத்தவர் ஆட்சிக்குப் போனவுடனே... அக்கம் பக்கம் பார்த்தார்கள். குறுக்கு வழியிலே சொத்துக்குவிக்க விருட்ணு பாயக்கூடிய வழி எது என்று பார்த்தார்கள். சுலபமான வழி......கேள்விகேட்பாரின்றி வேட்டை ஆடுவதற்கும், தேட்டை போடுவதற்கும் உள்ள ஜோரான வழி......கோயில் அடுக்களையில் பாய்வதுதான் என்று முடிவெடுத்தார்கள். அவ்வளவுதானே!

அதற்கு முன்பிருந்த பெருச்சாளிகளெல்லாம், இன்றுபோல் என்றும் இருப்போம் என்று நினைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகக் கொறித்து அசை போட்டுக்கொண்டிருந்தன. அந்தப் பெருச்சாளிகளை 1967-ல் விரட்டிவிட்டு, இந்தப் பெருச்சாளிகளெல்லாம் அடுக்களையில் பாய்ந்து டிரஸ்டிகளாக ஆகிவிட்டன.

இதுபோலத்தான் கூட்டுறவு சொஸைடிகளும் தேட்டைக்கு சரியான இடம் என்று, அதிலும் பாய்ந்து விட்டன.

அதனால்தான் — அவர்களின் சொத்துச் சேர்க்கும் படலத்துக்கு சுருக்கம் ஏற்பட்டுவிடாமலிருக்க—கோயில் நிலங்களைத் தொடமுடியாது...... தொட்டால் கோயிலு குப்புறவிழுந்துவிடும், மசூதி மல்லாந்துபோகும், சர்ச்சுகள் சாய்ந்துவிழும்...என்று இல்லாத பொல்லாத காரணங்களைக் காட்டி...கணக்குகளையும் நீட்டி...பாவலாக்களும் பாசாங்குகளும் எப்படி நடக்குது பார்த்தீங்களாய்யா?

ஆனால் ஒரு விஷயம். அது வர்க்க போதமும், வரலாற்று அறிவும் உள்ள உழவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

உழுபவனுக்கே நிலம் என்பது லேசுப்பட்ட காரியம் அல்ல.

நிலம் என்பது பிறர் கொடுத்து வாங்கக் கூடிய கடைச் சரக்கு அல்ல. உழவர்களே எடுத்துக் கொள்ள வேண்டிய உரிமை!

அதனால்தான் சொல்லுகிறோம்:
ஒற்றுமையாக சேருங்கள்!
ஒன்றுபட்ட கிளர்ச்சி நடத்துங்கள்!
ஓயாத போராட்டங்கள் நடத்துங்கள் என்று!

— ஐ. மா. பா.

# ஒரிசா சட்டமன்றத்திற்கு முன் மார்க்சிஸ்ட் கட்சி பேரணி

புவனேஸ்வர், ஏப், 17— புவனேஷ்வரிலுள்ள ஒரிசா சட்டமன்றத்திற்கு முன்பு மார்ச் 27-ம் நாள் மார்க்சிஸ்ட் கட்சி பிரும்மாண்டமான ஆர்ப்பாட்டம் நடத்தியது!

மேற்கு வங்கத்தில் ஜனநாயகம் படுகொலை செய்யப்பட்டதையும், மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கோரியும் மற்றும் பல முக்கிய கோரிக்கைகளுக்காகவும் இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

பத்ராக், கூர்தாரயில்வே நிலையங்களிலிருந்து ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொள்ள வந்த 500 தோழர்கள் வரும் வழியிலேயே கைது செய்யப்பட்டனர்.

ஒரிசா கூட்டணி அரசாங்கத்தின் இந்த நடவடிக்கைகளைப்பற்றி சற்றும் கவலைப்படாமல் அன்று காலையிலேயே சட்டமன்றத்திற்குமுன் தோழர்கள் குவிய ஆரம்பித்து விட்டனர்,

ஜாவேஸ்வர், பலாசோர், பூரி, பத்ராக், கியோன் ஜார் ஆகிய பகுதிகளிலிருந்து தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், இளைஞர்கள் திரளாக வந்திருந்தனர்.

## பிரும்மாண்டமான ஆர்ப்பாட்டம்

கையில் செங்கொடியுடனும், பேனர்கள், தோரணங்களுடனும் புவனேஷ்வர் மியூசியத்திற்கெதிராக திரண்டனர்.

சட்டமன்றத்திற்கு முன் பலத்த போலீஸ் காவல் போடப்பட்டிருந்தது. போலீசார் அணிவகுத்து நின்று, ஆர்ப்பரித்துவந்த செங்கொடித் தோழர்களை தடுத்தனர்.

ஆர்ப்பாட்ட ஊர்வலத்தினர் சட்ட மன்றத்திற்கு முன் நின்று முழங்கிய கோஷங்கள் விண்ணை முட்டியது.

பின் தோழர்கள் பாணமாலிதாஸ், சிவாஜி பட்நாயக், லக்ஷ்மண் பட்நாயக், ரமேஷ்பாந்தா, ஜனார்தனன் பாடி, சுசாந்தாகார், சக்தி தார் தாஸ் ஆகியோர் அடங்கிய குழு சட்டமன்றத்திற்குள் சென்று கோரிக்கைகள் அடங்கிய மகஜரை சமர்ப்பித்தது.

தோழர்கள் சமர்ப்பித்த கோரிக்கைகளின் மீது எடுக்கப்படும் நடவடிக்கைகளைப் பற்றிஏப்ரல்15ம் தேதிக்குள் அறிவிப்பதாக அவர்களிடம் உறுதி கூறப்பட்டது.

## மாபெரும் பொதுக்கூட்டம்

பின் சட்ட மன்றத்திற்கு முன் உள்ள பரேட் மைதானத்தில் பிரும்மாண்டமான கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் அரசாங்க அதிகாரிகளிடம் நடந்த பேச்சு வார்த்தைகளைப் பற்றியும், கோரிக்கைகளையும் தோழர்கள் விரிவாகப் பேசினர்,

தோழர் பாணமாலிதாஸ் பேசும்போது அரசாங்கத்தின்முன் வைக்கப்பட்டுள்ள கோரிக்கை மிகக் குறைவானது. இந்தக் குறைந்தபட்சக் கோரிக்கைகளையாவது அரசாங்கம் நிறைவேற்ற, மக்கள்ஏப்ரல் 15ம் தேதிக்குள் நிறைவேற்ற வேண்டும்.

மக்களின் நியாயமான இந்தக் கோரிக்கைகள் ஏற்கப்படா விட்டால் மாநிலம் தழுவிய இயக்கம் நடத்தி அரசாங்கத்தை பணியவைக்க வேண்டிய நிலை ஏற்படும் என்று தோழர் பாணமாலிதாஸ் எச்சரித்தார்.

அகில இந்திய மாணவர் சங்க பொதுச்செயலாளர் தோழர், பிமான் பாசு பேசுகையில், மேற்கு வங்கத்தில்இந்திரா, காங்கிரஸ் காரர்களால் செய்யப்பட்ட தேர்தல் மோசடிகளைப் பற்றி விளக்கிப் பேசினார். மற்றும் தோழர்கள் ரமேஷ்பந்தா, லஷ்மண் பட்நாயக் ஆகியோர் பேசினர்.

# விசுவநாத முகர்ஜி பேசியதை ரணதிவே பேசியதாகச் சரடு வலது கம்யூனிஸ்டுகளின் புரளி

மதுரை, ஏப். 17—

புதுடில்லியில் வலது கம்யூனிஸ்ட் தலைவர் விசுவநாத முகர்ஜி பத்திரிகை நிருபர்களுக்கு ஏப். 11-ல் அளித்த பேட்டியின்போது கூறியதை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் தோழர் பி. டி. ரணதிவே கூறியதாக வலது கம்யூனிஸ்டுகள் புரளி செய்துள்ளனர். யு. என். ஐ. செய்தி ஸ்தாபனம் வெளியிட்டு தினமலர் போன்ற பத்திரிகைகளில் வெளியாகியிருந்த செய்தியை வைத்துக்கொண்டு மதுரை போன்ற இடங்களில் வலது கம்யூனிஸ்டுகள் தட்டிகள் எழுதி வைத்திருக்கின்றனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்ப்பில் கண்ணவிழ்ந்து போயிருப்பவர்களுக்கு தெளிவு படுத்துவதற்காக கீழ்வரும் பி. டி, ஐ. செய்தியைப் பிரசுரிக்கிறோம்: —

வலது கம்யூனிஸ்ட் தலைவர் விசுவநாத் முகர்ஜி புதுடில்லியில் நிருபர்கள் கூட்டத்தில் கீழ்வருமாறு கூறினார்.

ஒரேயொரு கோஷத்தால் மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெரிய விலை கொடுக்க வேண்டிய நிலைஏற்பட்டது. ''இந்திராவும் யாகியாகானும் ஒன்றே' என்றகோஷத்தைத்தான் சென்ற தேர்தலில் அவர்கள் முக்கியமாக முழக்கினார்கள். அந்தக் கோஷம் அவர்களையே திருப்பித் தாக்கியது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளின் பங்களாதேசக் கொள்கைக்கும் அவர்களுடைய பயங்கரவாதத்துக்கும் எதிராக இளைஞர்களின் எழுச்சிதான் அவர்களுடைய தோல்விக்கு மற்றுமொரு காரணம். பங்களாதேசத்தின் மூலம் பாகிஸ்தானை உடைப்பதற்கு இந்தியா முயற்சிக்கிறது என்று முஸ்லீம்கள் வசிக்கும் பகுதிகளில் மார்க்சிஸ்ட்கள் பிரசாரம் செய்தனர். இதுவும் அவர்களின் தோல்விக்குக் காரணம் என்று முகர்ஜி கூறினார்.

—பி. டி. ஐ.

# மக்களை மேலும் ஏழைகளாக்குவதற்கே திட்டம்தீட்டப்படுகிறது

## கடந்த 25 ஆண்டுகால காங்கிரஸ் ஆட்சியில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களினால் நாது நாட்டில் ஏற்பட்டுள்ள ''மகத்தான வளர்ச்சி''யைப் பாரீர்!

ஜனாதிபதி அறிக்கையின்மீது நடந்த விவாதத்தின் மீது ஏப்ரல்4-ம்நாள் விவாதம் நடைபெற்றது, அதற்கு பதிலளிக்கையில் பிரதமர் இந்திரா காந்தி வேலையில்லாத் திண்டாட்டம், விலைவாசி, லைசென்ஸ் கொள்கை, சுயதேவைப் பூர்த்தி ஆகியவை குறித்து அரசாங்கம் மறுபரிசீலனை செய்வது பற்றி தீவிரமாக யோசிப்பதாக பதிலளித்தார்.

அண்மையில் ஆண்டுத்திட்டங்களைப் பற்றியும், ஏற்றுமதி இறக்குமதியைப் பற்றியும் அறிவிக்கப் பட்ட கொள்கைகள் வெறும் வாய்ச்சவடால்கள் தான்.

அரசாங்கத்தின் பொருளாதார சர்வேயே சீரழிந்து கொண்டிருக்கும் நம் நாட்டுப்பொருளாதாரம் பற்றி தெளிவாக எடுத்துக் கூறுகிறது

1961—65-ம் ஆண்டுகளில் சராசரி தொழில் வளர்ச்சி 10·4 சதமானமாக இருந்தது. இது 1966—70 ஆண்டுகளில் 3·4 சதமானமாக வீழ்ந்துவிட்டது.

1971-ம் ஆண்டில் தொழில் வளர்ச்சி மேலும் 1·5 சதமானம் வீழ்ந்துள்ளது. இவ்வாறுநம் நாட்டின் தொழில் வளர்ச்சி விகிதம் தொடர்ந்து வீழ்ச்சியடைந்து கொண்டேயிருக்கிறது. எல்லா தொழில்களும் இதனால் பாதிக்கப்படுகிறது. அதிலும் குறிப்பாக, தொழில் உற்பத்திக்கான பெரிய இயந்திரங்கள் செய்யும் தொழில் மிகவும் பாதிக்கப் பட்டுள்ளது.

பொதுத் துறையில் உள்ள பல தொழிற்சாலைகளில் உள்ள இயந்திரங்களின் மொத்த உற்பத்தி அளவில் 25 முதல் 40 சதமானம் வீழ்ச்சியடைந்துள்ளது.

இரயில்வே துறை வருமானம் பெருமளவு குறைந்துள்ளது.

இஞ்ஜினியரிங் தொழிற்சாலைகள், பஞ்சாலைகள், சுரங்கத் தொழிற்சாலைகள் நூற்றுக்கணக்கில் மூடப்பட்டுக் கிடக்கின்றன.

1971-ம் ஆண்டு இறுதிவரை வேலை வாய்ப்பு தேடித்தரும் நிலையங்களில் பதிவு செய்திருந்தவர்களின் எண்ணிக்கை 50 லட்சத்து 99 ஆயிரத்து919 பேர்களாகும்,

வேலை வாய்ப்பு தேடித்தரும் நிலையங்களில் உள்ள பட்டியலில் உள்ளவர்களே இவர்கள். இது தவிர பதிவு செய்யப்படாமல் லட்சக்கணக்கில் உள்ளனர்.

1968-ம் ஆண்டில் வேலையில்லாதோரின் சராசரி 9·9 சதவீதமாக உயர்ந்து கொண்டிருந்தது. இது 1971-ம் ஆண்டில் 25·3 சதமானத்திற்கு தாவி விட்டது.

1969-ம் ஆண்டில் வேலை வாய்ப்பு நிலையங்களில் பதிவு செய்த 8 பேர்களில் ஒருவருக்கு வேலை கிடைத்து வந்தது. தற்போது, 1971-ம் ஆண்டில் 11 பேரில் ஒருவருக்குத்தான் வேலை கிடைக்கிறது. (அரசாங்கக் கணக்குபடி)

நான்கு வருடங்கள் தொடர்ந்தார் போல் நல்ல பருவமழை பெய்து, அமோக விளைச்சல் ஏற்பட்ட பின்னும் உள்ள நிலைமை இதுதான்.

இந்த நல்ல பருவ மழையும் அமோக விளைச்சலும் கிராமத்திலுள்ள ஏழை மக்களுக்குப் பயன்படவில்லை. உணவுப் பொருள் இறக்குமதியைக் குறைப்பதற்கு அரசாங்கத்திற்கும் முடியவில்லை. நகர்ப்பகுதிகளுக்கும் அதிகப் பொருட்கள் சப்ளைசெய்யப்படவில்லை. கடந்த 15 ஆண்டுகளாக உணவு பொருட்களின் சப்ளை ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. நகர்ப்புற ஏழை மக்கள் வாங்க முடியாத அளவுக்கு விலைவாசி எக்கச் சக்கமாக உயர்ந்துள்ளது. இந்த விலைவாசி உயர்வால் ஏழை விவசாயிகளும் பயனடையவில்லை. அறுவடைக் காலத்தில் நெல்லை குறைந்த விலைக்கு கொள்முதல் செய்வதற்காக வியாபாரிகள் தற்காலிகமாக விலையைக் குறைக்கும் தில்லுமுல்லுக்கு இரையாகின்றனர்.

நிலைமை இப்படி இருக்கையில், விவசாயிகளுக்கு எதிராக அரசாங்கம் இந்த இடத்தில் நுழைகிறது. அன்னிய மார்க்கெட்டில் உணவுப் பொருட்கள் குறைந்த விலைக்கு கிடைக்காத நிலையில், அரசாங்கம் உணவுப் பொருட்களுக்காக 100 கோடி ரூபாய்தான் மானியமாக ஒதுக்கியுள்ளது. அதாவது விவசாயிகள் தங்களின் விளை பொருட்களுக்கு குறைந்த விலைதான் பெறுவர் என்று அர்த்தம்.

ஏற்கனவே, பசுமைப் புரட்சியின் விளைவால் கிராமத்திலுள்ள சில பெரிய பணக்காரர்கள் கொழுத்திருக்கிறார்கள். இதனால் கிராமத்திலுள்ள ஒரு சில பணக்காரர்களுக்கும் பெரும்பான்மையான ஏழை விவசாயிகளுக்குமிடையேயுள்ள வித்தியாசம் அதிகரித்துள்ளது.

பசுமைப் புரட்சியின் ஒரு பகுதியாக, விவசாயத்தில் இயந்திரங்கள் புகுத்தப் பட்டதால், கிராமத்திலுள்ள விவசாயத் தொழிலாளர்கள் வேலையிழந்துள்ளனர். சுதந்திரமடைந்த பின் கடந்த 25 ஆண்டு காலத்தில் மிகக் கடுமையான ஏழ்மையால் பாதிக்கப்பட்டுள்ளனர். மாதமொன்றிற்கு சராசரி20ரூபாயேவருமானமுள்ளவர்களின் எண்ணிக்கை 50 சதமானத்திலிருந்து 70 சதமானமாக உயர்ந்துள்ளது.

உடுப்பதற்கு துணி, மற்றும் மிக அத்தியாவசியமான பொருட்களின் வாங்கும் சக்தி அப்படியேதான் இருக்கிறது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா,